# கனவுகளின் தத்துவம்

அருளியது

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம்

திரு. ஜா. சுப்பிரமணியன்







வெளியிடுவோர்

தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

சுவாமி சிவானந்தா சாலை

இராசிபுரம் : : சேலம் மாவட்டம்

விலை] 1996 [ரூ. 15.00

1

## முகவுரை

மனோதத்துவ ஆராய்ச்சியாளர்களால் கனவுகளைப் பற்றியும், அவற்றின் காரணத்தைப்பற்றியும் செய்யப்பட்டுள்ள ஆராய்ச்சிகள் தவறானவை. கனவுகள் உண்டாகக் காரணம் கனவு காண்பவரின் அடக்கப்பட்ட ஆசைகளாலேயேயென்று அவர்கள் நிலைநாட்டுகிறார்கள். ஆசைகளை அடக்குவதா லேயே தங்கள் விரும்பம்போல் அவர்கள் கனவுகளை உண்டாக்க முடியுமா? அவர்களால் முடியவே முடியாது. அவர்கள் கனவு உண்டாக்குவதற்கு ஆசைகள் தூண்டுகின்றன அல்லது உதவி செய்கின்றன என்று கூறுகிறார்கள். ஆனால் அவர்கள் கனவுகளை ஆக்கும் பொருளை எது அளிக்கிறது என்பதையும் எது ஆசைகளுக்கு உள்ளபடி உருவளித்து, கனவு காண்பவனுக்கு அவனது அடங்கிய ஆசைகள் உருக்கொண்டு உண்மைபோல் தோற்றமளிக்க உதவும்படி மாற்றுவது எது என்றும் அறியமாட்டார்கள்.

ஆசைகள் ஊக்கத்தை ஊட்டுவது மாத்திரமே. மனது விழிப்பு நிலையின் அனுபவங்களால் அளிக்கப்பட்ட பொருள்களைக் கொண்டு கனவுகளை உண்டுபண்ணுகிறது. கனவில் காணும் ஜீவர்கள் சம்ஸ்காரப்படுகையினின்று அல்லது உன் மனதின் சிந்தைகளினின்று உற்பத்தியாகின்றன. அஜீரணம்கூட கனவுகளை உண்டாக்குகிறது. கனவு காண்பவன் தேஜஸன். விழித்திருக்கும் ஆளே ஸ்வப்ன ஆளைப் படைக்கிறான். ஸ்வப்ன ஆள் விழித்திருக்கும் ஆளின் பொருளாகவே இருப்புள்ளவனாய் அவ்வாறே தான் உண்மையாயுளன்.

விழிப்பு நிலையும், கனவு நிலையும் உண்மை அங்கங்களாகப் பக்கத்தில் பக்கத்தில சுதந்திரமாக இருப்புள்ளவையல்ல.

## 2

நாம் ஏன் கனவு காண்கிறோம்? இக்கேள்விக்குப் பல்வேறு விடைகள் அளிக்கப்பட்டுள்ளன. கனவுகள் நூதன உருவில் நமது விழிப்பு நிலை அனுபவத்தின் பிரதிபிம்பமேயன்றி வேறன்று. நமது உடலில் எங்கேயோ அதிலும் முக்கியமாக இரைப்பையில் ஏதோ அவயவக் கோளாறு காரணமாகவே கனவுகள் தோன்றுகின்றன என்பது மருத்துவக் கலையின் அபிப்பிராயம். சிலவேளைகளில் வரப்போகும் வியாதிகள் கனவில் தோன்றுகின்றன.

ஸிக்மண்ட் ப்ராயிடின் கருத்துப்படி எல்லாக் கனவுகளும் விலக்கின்றி ஆசை நிறைவேற்றமே. கனவுகள் உண்டாவதற்கு உடலின் தூண்டுதல் மாத்திரம் காரணமல்ல. கனவுயந்திர அமைப்பு சிக்கலானது. விருப்பங்கள் அழிவற்ற இயல்புடையவை. அவற்றின் தோற்றத்தைக் கட்டுப்படுத்தும் சதாசாரி ஆத்மாவுக்கு அவை வெறுப்பு உண்டாக்கக் கூடியவை. அதனால் அச்சதாசாரியின் தணிக்கைக்குத் தப்பும் பொருட்டு விருப்பங்கள் மாறுவேடங்களில் தோற்றமளிக்கின்றன. விருப்பங்களை உள்ளது உள்ளபடி தோற்றுவிக்கும் கனவுகள் மிக மிகச்சிலவே. கனவுகள் ஆசைகளை ஓரளவு திருப்தி செய்பவை. அவை மனத்தின் முறுக்கைச் சமனப்படுத்தி நாம் ஓய்வை அடைய உதவுகின்றன. பலமான தாக்குதல்களை ஒடுக்க அவை பயன்படுகின்றன. கனவில் உன்னுடைய மிருகத் தன்மையை உணர்வாய்.

சுவப்ன நிலையில் காணும் பொருள்கள் பெரும்பாலும் ஜாக்கிரத நிலையில் அவன் பார்க்கும் பொருள்களிலிருந்து பலவிதங்களில் வேறுபட்டவையல்ல. கனவு நிலையிலும் அவன் தன் குடும்பத்தைச் சேர்ந்தவர்களோடும் நண்பர்களோடும் உரையாடுகிறான். அதே உணவை உண்கிறான், நதிகள், மலைகள், மோட்டார் வண்டிகள், தோட்டங்கள், தெருக்கள், சமுத்திரம், ஆலயங்கள் ஆகியவற்றைக் காண்கிறான். அலுவலகத்தில் அலுவல் செய்கிறான். தேர்வுக் கூடத்தில் வினாத்தாள்களுக்கு

விடையளிக்கிறான். சிலரோடு சண்டை சச்சரவும் செய்கிறான். தூக்கத்துக்குச் செல்கையில் மனிதன் பொருள்களோடு பழைய தொடர்புகளின் பயன்களைத் துறப்பதில்லையென்று இது காட்டுகிறது.

ஜாக்கிரத அல்லது விழிப்பு நிலை, கனவு நிலை, சுழுப்தி அல்லது ஆழ்ந்த தூக்கநிலை ஆகிய மூன்று நிலைகளையும் அனுபவிக்கும் ஆள் விழிப்பு நிலையில் விஸ்வன் என்றும், கனவு நிலையில் தேஜஸன் என்றும், ஆழ்ந்த தூக்க நிலையில் பிராக்ஞன் என்றும் கூறப்படுகிறான். ஒருவன் தூக்கத்திலிருந்து விழிக்கும்போது, ஆழ்ந்த தூக்கத்தில் பிராக்ஞனின் அனுபவத்தை விஸ்வன்தான் நினைவுகூர்ந்து, "நான் அயர்ந்து தூங்கினேன், எதையும் உணரவில்லை" என்று கூறுகிறான். இல்லாவிட்டால் ஆழ்ந்த தூக்கத்தின் சுகானுபவ நினைவே அசாத்தியமாகும்.

மனப்பான்மை, இயற்கைப்போக்கு, அவனுடைய ஆகாரம் ஆகியவற்றுக்குத் தக்கபடி சுவப்னத்தின் பிரதிக் கிரியைகளும் வேறுபடுகின்றன.

கனவுகள் யாவும் சில விநாடிகளில் தோன்றும் விஷயங்களே. பத்து விநாடிகளுக்குள் பல ஆண்டுகளில் நடக்கக்கூடிய சம்பவங்களை நீ கனவில் அனுபவித்து விடுவாய்.

சிலர் எப்போதாவது கனவுகள் காண்பர். சிலர் தினந்தோறும் கனவு காண்பர். அவர்களுக்குக் கனவின்றிய தூக்கமே ஒருபோதும் இல்லை.

சூரியன் அதன் கிரணங்களுக்கு உற்பத்தி ஸ்தானமாயும் சொற்பகால ஓய்விடமாயும் உளது. சூரியோதய காலத்தில் கிரணங்கள் சூரியனிடமிருந்து கிளம்பி நாலா பக்கங்களிலும் வியாபிக்கின்றன. அஸ்தமன சமயத்தில் அவை சூரியனிடம் புகுந்து ஒடுங்கியிருந்து, மறுநாள் உதய காலத்தில் திரும்பவும் வெளிவருகின்றன. இதேபோல் விழிப்பு நிலையும் கனவும்

ஆழ்ந்த தூக்க நிலை (சுழுப்தி) யிலிருந்து வெளிவந்து அதில் மறுபடி புகுந்து ஒடுங்கித் திரும்பவும் அதே போக்கைப் பின்பற்றுகின்றன.

சுவப்ன உலகத்தில் தோன்றும் யாவும் ஜாக்ரதா உலகத்தின் மறு பிறப்பே. அது இப்போதைய வாழ்க்கையில் பார்த்து, அனுபவித்து அல்லது வியவகாரம் நடத்திய பொருள்களின் மறு பிறப்பு மட்டுமல்ல, இவ்வுலகத்தில் முன் ஏதாவது ஜென்மத்தில் பார்த்து அனுபவித்து அல்லது வியவகாரம் நடத்திய பொருள்களின் மறு பிறப்பாயும் இருக்கலாம். ஆகவே, கனவு உலகம் ஜாக்கிரத உலகத்திலிருந்து தனிப்பட்டது என்று சொல்ல முடியாது.

விழிப்பு நிலையில் பார்க்கப்படும் பொருள்கள் எப்போதும் உடலுக்கு வெளியில் உள்ளன. அதனால் அது கனவு காண்பவனுக்கு வெளியிலுள்ளது; சுவப்ன உலகமோ எப்போதும் சுவப்னம் காண்பவனுக்கு உள்ளேயுள்ளது. அது ஒன்றே இரண்டுக்குமுள்ள வேறுபாடு.

விழிப்பு உலகம் முழுதும் கனவு அவஸ்தையில் ஒடுங்கிவிடுகிறது. அதனால், கனவு காண்பவன் ஜாக்கிரத உலகத்தையும் கனவு உலகத்தையும் வேறுபடுத்தி உணர உதவுவதான தனிப்பட்ட லக்ஷணங்கள் காண்பது சாத்தியமில்லை.

விஞ்ஞானிகளும் மேனாட்டு தத்துவ சாஸ்திரிகளும் தங்களது ஜாக்கிரத அனுபவங்களை ஆராய்ந்தே தங்கள் முடிவுகளைக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் வேதாந்திகளோ ஜாக்ரத, சுவப்னம், சுழுப்தி ஆகிய மூன்று நிலைகளின் அனுபவங்களையும் பயன்படுத்திப் பிறகு தங்கள் முடிவுகளைக் கொண்டிருக்கிறார்கள். அதனால் பின்னவர்களின் முடிவுகள் உண்மையாயும், சரியாயும் பூரணமாயும், நிறைந்தும் பின்னமின்றியும், இருக்க, முன்னவர்களின் முடிவுகள் பின்னமாயும் ஒரு பட்சமாயும் இருக்கின்றன.

மணியடித்தல், கடிகாரத்தின் எச்சரிப்பு சப்தம், கதவு அல்லது சுவர் தட்டப்படுதல், காற்று வீசுதல், மழை பெய்தல், இலைகள் அசைதல், மோட்டார் வண்டியின் சப்தம், ஜன்னல் பிளத்தல் முதலியவை சிற்சில வெளி சப்தங்கள் கனவு காண்பவனின் மனத்தில் பல்வேறு கற்பனைகளை விளைவிக்கும். அவை சில உணர்ச்சிகளை உண்டு பண்ணுகின்றன; அவை தூங்குபவனுடைய கற்பனா சக்திக்கும் மனதின் சூக்ஷ்மத்துக்கும் தக்கபடி அதிகரிக்கின்றன. இவ்வொலிகள் வெகு சிரம சாத்தியமான கனவுகளை உண்டாக்குகின்றன.

நீ தூங்குபவனுடைய மார்பை ஊசிமுனையால் தொட்டால், அவன் யாரோ தன் உடலில் கடுமையாக அடி கொடுத்ததாயும் அல்லது யாரோ ஈட்டியால் குத்தின தாகவும் கனவு காணக்கூடும்.

பிரகிருதியின் குணங்களால் கட்டப்பட்டிருப்பதால் ஜீவாத்மா தன் சுவப்ன நிலையில் தான் சுவப்னம் காண்பதாக அறிவதில்லை; தன்னைப்பற்றிய பிரக்ஞையும் இல்லை. தனது ஜாக்கிரத நிலையின் சம்ஸ்காரங்களின் வினைகளின் பயனாகத் தனது கனவு மனத்தின் படைப்புகள் தன் முன் செல்வதை யாதொரு செயலுமின்றி அவன் பார்க்கிறான்.

கனவு காண்பவன் கனவு நிலையில் உள்ளபோது தான் கனவு காண்கிறேன் என்பதை உணர்ந்திருப்பது சாத்திய மானது. விழிப்பு நிலையில் உனது எண்ணங்களுக்குச் சாட்சியாயிருக்கக் கற்றுக்கொள். கனவு நிலையில் நீ கனவு காண்பதை நீ அறிந்துகொள்ள முடியும். கனவு நிலையில் நீ சுதந்திரமாக உன் சொந்த எண்ணங்களை மாற்றவோ, நிறுத்தவோ உண்டாக்கவோ உனக்கு இயலும். கனவு நிலையில் நீ விழித்திருக்க உன்னால் முடியும். விழிப்பு நிலையின் எண்ணங்களைக் கட்டுப்படுத்தினால், எண்ணங் களையும் நீ கனவு நிலையில் கட்டுப்படுத்த முடியும்.

சில சமயங்களில் கனவுகள் மிகவும் கவர்ச்சியுள்ளவையாக இருப்பதோடு உண்மையாகவும் ஆகிவிடுகின்றன. அவை நடக்கப்போகும் சம்பவங்களை முன்னதாகக் கூறுகின்றன. 1947-ம் ஆண்டு ஜனவரி முதல் தேதி ஹரித்துவாரத்தில் ஒரு மனிதன் ஜனவரி 3-ந் தேதி இரவு வாரணாசியில் இருக்கப் போவதாகக் கனவு கண்டான். அது உண்மையாகவே முடிந்தது. ஒரு உத்தியோகஸ்தர் தமக்கு அலஹாபாத்துக்கு மாற்றல் கிடைக்கும் என்று கனவு காண்கிறார். மறுநாள் காலை அவருக்கு மாற்றல் உத்தரவு கிடைக்கிறது. மற்றொருவன் அடுத்த சனிக்கிழமை தனக்கு மோட்டார் விபத்து நேரும் என்று கனவு காண்கிறான். அதுவும் உண்மையாக முடிகிறது.

கனவுகளைச் சிந்தித்து ஆராய்வதன் மூலம் ஆழ்ந்த அறிவு உண்டாகிறது. தனது கனவுகளை ஆராயாதவன் எவனும் தன்னை உண்மையில் அறிந்தவனாகான். கனவுகளின் ஆராய்ச்சி நமது ஆத்மா எவ்வளவு மர்மமானது என்பதைக் காட்டுகிறது. தர்க்கரீதியான ஞானத்தையும் கடந்த நமது இயல்பின் அந்த நிலையைக் கனவு நமக்குத் தோற்றுவிக்கிறது. ஒவ்வொரு கனவுத் தோற்றத்துக்கும் பொருள் உண்டு. கனவு என்பது நாம் அறியாத மொழியில் எழுதியுள்ள கடிதம் போன்றது.

கனவுகளினின்று குறிப்புகள் மூலம் வாழ்க்கையின் விடுகதைகள் பல விடுவிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு மனிதன் ஆத்மீக வாழ்க்கை எவ்வழியில் ஓடிக்கொண்டிருக்கிறது என்பதைக் கனவுகள் சுட்டிக்காட்டுகின்றன. கனவுகள் மூலம் தன்னைத்திருத்திக் கொள்வதற்குத் தக்க போதனையை ஒருவன் பெறக்கூடும். ஒரு குறிப்பிட்ட நிலைமையில் எப்படி நடந்துகொள்வது என்பதைக் கனவுகள் மூலம் அறியலாம். விழிப்பு நிலைப்பிரக்ஞைக்கு அறிய முடியாத ஒரு வழியைக் கனவுகள் காட்டுகின்றன. கஷ்டகாலங்களில் முனிவர்களும் மகான்களும் கனவுகளில் தோன்றி வழி காட்டுகிறார்கள்.

வேதாந்திகள் கனவு நிலையையும் சுழுத்தி நிலையையும் கவனமாக ஆழ்ந்து ஆராய்ந்து கனவு நிலையைப் போன்ற ஜாக்கிரத நிலையும் பொய்யானதே என்று தர்க்க ரீதியாக நிரூபிக்கிறார்கள். அவர்கள் இரு நிலைகளுக்கும் உள்ள ஒரே வேற்றுமை ஜாக்கிரத நிலை நீண்ட கனவு (தீர்க்க கனவு) என்று அறுதியிட்டு கூறுகிறார்கள்.

கனவு காண்பவன் கனவு காணும் வரையில், கனவுப் பொருள்கள் உண்மை. அவன் விழித்துக்கொள்ளும் போது கனவு உலகம் பொய்யாகி விடுகிறது. ஒருவன் ஆத்மப் பிரகாசம் அல்லது பிரம்ம ஞானத்தை அடையும் போது, இந்த ஜாக்கிரத உலகமும் கனவு உலகத்தைப் போலவே பொய்யாகி விடுகிறது.

இந்நிலைகளில் உண்மையில்லாததால் யாரும் தூங்கவுமில்லை, கனவு காண்பதுமில்லை, விழிப்பதுமில்லை என்பதே உண்மையிலும் உண்மை.

மூன்று நிலைகளிலும் கடந்து நான்காவது நிலையாகிய துரீயத்தில் அதாவது எல்லையற்ற பிரம்மானந்தத்தில் சச்சிதானந்த சொருபத்தில் சாந்தி அடைவாயாக.

சுவாமி சிவானந்தா

# பதிப்பாளர்களின் குறிப்பு

ஸ்ரீ சுவாமி சிவானந்தர் சங்கர சம்பிரதாயத்தைச் சேர்ந்த அத்வைத வேதாந்தியேயாயினும், அவர் தம் வாழ்க்கையிலும் உபதேசங்களிலும் உயர்ந்த இலட்சியத்தையும் தீவிர அனுஷ்டானத்தையும் சமரஸப்படுத்துவது காரணமாய் அவர் ஒப்பற்று விளங்குகிறார். அவருடைய "தெய்வீக வாழ்க்கை" இலட்சிய வாழ்க்கை; இலட்சியமாயும் தெய்வீகமாயுமுள்ளது. ஏனெனில் அதை இங்கேயே இப்போதே கடைபிடிக்க முடியும்.

அதனால்தான், இந்த ஞானி தமது தெய்வீக ஒளிக்கிரணத்தை மனிதன் முன் நிற்கும் எல்லாப் பிரச்னைகளின் மீதும் வீசியிருக்கிறார். தத்துவபோதத்தையும் யோகத்தையும் விளக்குவதோடு அவர் வைத்தியம், ஆரோக்கியம், சுகாதாரம் முதலியவற்றைப் பற்றியும் "எவ்வாறு செல்வந்தன் ஆவது" என்பதைப் பற்றியும்கூட எழுதி நமது இலக்கியத்தை வளமுறச் செய்துள்ளார்.

இப்போது மிகவும் மனங்கவரும் அற்புதமான கனவுகளைப்பற்றி அவரது ஊக்க மூட்டுவதும் அறிவை ஒளிரச் செய்வதுமான கருத்துக்கள் அவருடைய தெய்வீகப் பேனாவிலிருந்து நாம் அடையப் பெறுகிறோம். அவர் கனவுகளைப் பல்வேறு கோணங்களிலிருந்து நோக்கி அதன் மீது அத்தகைய பிரகாசப் பிரவாகத்தை வீசியிருப்பதால் அதன் பொய்மை வெளியாவதோடு, ஜாக்கிரத நிலையும் பொய்யேயென்று உணரலாகிறது. இவ்வாறு உயர்ந்த உண்மைப் பொருள் ஒன்றே இருப்புள்ளது என்பதை நமக்கு விளக்குகிறார் ஸ்ரீ சுவாமி சிவானந்தா.

# உள்ளுறை

## 1. கனவுக் கீதம்

குரு குரு ஜப்னா (குரு குரு என்று ஜபம் செய்)
ஜகச் சப் ஸ்வப்னா (வேறு யாவும் கனவே)

குரு குரு ஜப்னா
ஜகத் தீர்க்க ஸ்வப்னா (உலகம் நீண்ட கனவே)

ஜகத் தீர்க்க ஸ்வப்னா
உலகு நீண்ட கனவே

குரு சரணம் அடை
யாவும் போலி (குரு குரு ஜப்னா)

நீ கனவில் பொருள்களைக் காணும் போது அவையாவற்றையும் உண்மையாகக் கொள்கிறாய். நீ விழித்துப் பார்க்கும்போது அவையாவும் பொய்யாகின்றன.

நாம ரூப உலகம் நீ இரவில் காணும் கனவு போன்றது நீ அவற்றை உண்மையாகக் கொள்கிறாய். ஆனால் அவை பொய்யானவை, நிலையற்றவை.

பிரம்ம தேஜஸ் கொண்ட கடவுள் ஒருவரே இருப்புள்ளவர். விழித்துக்கொள் விழித்துக்கொள். ஒளிகாண விழித்துக்கொள். விழித்துக்கொள், விழித்துக்கொள். மாயைத் தூக்கத்தினின்று விழித்துக்கொள், பொருள்களைச் சரியான முறையில் காண்பாய்.

## 2. கனவு

இந்திரியங்கள் யாவும் ஓய்வடைந்து மனது மட்டும் வேலை செய்யும் போது இந்திரிய விஷயங்களை ஒரு மனிதன் அனுபவிக்கும் கனவு நிலையே கனவாம். மனமே கர்த்தாவாயும் விஷயமாயும் உளது. அது கனவுப் படங்கள் அனைத்தையும் படைக்கிறது. இந்த நிலையில் ஜீவன் தேஜஸன் எனப்படுகிறான். அந்தர்ப்ரக்ஞை (உள்ளுணர்வு)

இருக்கிறது. "அவன் தூங்கும் போது, அந்த நிலையில் தேர்களும் இல்லை, பரிகளும் இல்லை, பாட்டைகளும் இல்லை; ஆனால் அவன் தானே தேர்களையும் பரிகளையும் பாட்டைகளையும் படைத்துக்கொள்கிறான்" என்று சுருதி கூறுகிறது.

கனவு உலகம் ஜாக்கிரத உலகத்தினின்று வேறுபட்டது. கல்கத்தாவில் படுக்கைக்குச் செல்லும்போது முற்றிலும் ஆரோக்கியமுள்ள மனிதன் கட்டிலில் தூங்கும்போது, கனவு உலகத்தில் டில்லியில் நோயாளியாகி அலைகிறான். அல்லது இதற்கு மாறாகவும் நடைபெறுகிறது. கனவு உலகினின்றும் விழிப்பு உலகத்தினின்றும் ஆழ்ந்த தூக்கம் வேறுபட்டது. கனவு காண்பவனுக்குக் கனவு உலகமும் கனவுப் பொருள்களும் விழிப்பு உலகத்தின் பொருள்களையும் அனுபவங்களையும் போலவே அவ்வளவு உண்மையாயிருக்கின்றன. கனவு காண்பவன் கனவு உலகத்தின் பொய்த் தன்மையை உணர்வதில்லை. கனவினின்று வேறுபட்ட விழிப்பு உலகத்தின் இருப்பை அவன் அறிவதில்லை. உணர்வு மாறுகிறது. இந்த உணர்வின் மாறுதல் விழிப்பு நிலை அனுபவங்களையாவது கனவு அனுபவங்களையாவது கொணர்கிறது. பொருள்கள் தங்களிலேயே மாறுதலடைவதில்லை. மனத்தில் மட்டும் தான் மாறுதல் உளது. மனது, தானே விழிப்பு, கனவு இரு வேடங்களையும் தோற்றுவிக்கிறது.

கனவுகள் எவ்வளவு முரண்பாடுடையவாயினும் அவை இருக்கும்வரையில் அவைகள் உண்மையென்றே, கனவு காண்பவன் கருதுகிறான். அவன் சில சமயங்களில் தன் தலை வெட்டப்பட்டதாயும், தான் காற்றில் பறப்பது போலவும் கனவு காண்கிறான்.

கனவும் அதில் காணும் வெவ்வேறு அனுபவங்களும் உண்மையென்றே கனவு காண்பவன் நம்புகிறான். அவன் கனவினின்று விழிக்கும்போதுதான், அவன் தான்

அனுபவித்தது கனவுமாத்திரமே, பிரமையே (பொய்யே) என்று உணர்கிறான். இதுபோல்தான் ஜாக்கிரத உலகத்திலும் ஜீவனது விவகாரம், அறிவிலியான ஜீவன் புலனின்பங்களுடன் கூடிய மாறுதலுள்ள உலகம் உண்மையானது என்று கற்பனை கொள்கிறான். அவன் விஷயங்களின் உண்மையை விழித்துணரும்போது, அவனது திருஷ்டி கோணம் மாறிவிடுகிறது. அவித்யையாகிய திரை நீங்கும் போது, அவன் ஜாக்கிரத் உலகமும் சுவப்பன உலகத்தைப் போன்றே பொய்யானது என்றுணர்கிறான்.

கனவில் ஒரு ஏழை ஏகசக்ராதிபதியாகி பல்வேறு இன்பங்களை அனுபவிக்கிறான். ஒரு மகாராணியை மணந்து பெரிய அரண்மனையில் வாழ்ந்து பல மக்களைப் பெறுகிறான். தனது மூத்த குமாரியை ஒரு மகாராஜாவின் குமாரனுக்குத் திருமணம் செய்கிறான். மனைவி மக்களோடு ஐரோப்பிய சுற்றுப் பிரயாணம் செய்கிறான். பிறகு திரும்பி பல ஸ்தலங்களுக்கு யாத்திரை செய்கிறான். காசியில் காசரோகத்தால் காலமாகிறான். ஐந்து நிமிடங்களுக்குள் அவன் மேற்கண்ட இத்தனை அனுபவங்களையும் அடைகிறான். எத்தகைய அதிசயம்!

கனவு நிலை உள்ளுக்குள் சூக்ஷ்மமானதும், ஜாக்கிரத நிலை தூலமாய் நீண்டதுமாயினும் பார்க்கும் பொருள்கள் இரண்டிலும் உண்மையற்றவைகளே. இரண்டிலும் விஷயானுபவம் ஒரே மாதிரியிருப்பதால் அறிஞர்கள் ஜாக்கிரத நிலையையும் கனவு நிலையையும் நன்றாகவே கருதுகிறார்கள். கனவும் பிரமையும் ஆகாசக் கோட்டையாய் இருப்பது போல் இப்பிரபஞ்சமும் அவை போன்றதே யென்று வேதாந்தம் அறுதியிட்டுக் கூறுவதாக அறிஞர்கள் கூறுகிறார்கள்.

கனவுகள் எதிரிடையைக் காண்பிக்கின்றன. அளவற்ற உணவை உடைய ஓரரசன் தெருக்களில் அன்னத்திற்குப் பிச்சையெடுப்பதாகக் கனவு காண்கிறான். ஜிதேந்திரியனும்,

பரிசுத்தமான ஒரு சாதகன் தான் ஸ்திரீ சம்பந்தமான நோயால் பீடிக்கப்பட்டதாகக் கனவு காண்கிறான். ஒரு பராக்கிரமமுள்ள போர்வீரன் தான் பகைவனுக்குப் பயந்து போர்க்களத்திலிருந்து ஓடுவதாகக் கனவு காண்கிறான். பலவீனமான நோயாளி ஒருவன் தான் இறந்ததாகக் கனவு காண்கிறான். அவன் உயிரோடு இருக்கும் தன் தந்தையை இறந்ததாகக் கண்டு இரவில் ஓலமிடுகிறான். அவன் தந்தையின் தகனக்கிரியை நடத்துவதாகவும் காண்கிறான். சில வேளைகளில் நகரத்தில் வாழும் ஒருவன் தான் சிங்கத்தோடும் புலியோடும் போரிடுவதாகக் கனவு கண்டு இரவில் இரைச்சலிட்டுக் கத்துகிறான். அவன் தனது பெட்டியென்று எண்ணித் தன் தலையணைகளை எடுத்துக் கொண்டு புகைவண்டி நிலையத்துக்குச் செல்கிறான். சிறிது தூரம் சென்ற பிறகு அதைக் கனவு என்று உணர்ந்து வீடு திரும்புகிறான். சிலர் தாங்கள் கழிப்பறையில் உட்கார்ந்திருப் பதாகக் கனவு கண்டு படுக்கையில் மலஜலம் கழித்து விடுகிறார்கள்.

நீ விழித்தவுடன் கனவு பொய்யாகிறது. கனவில் விழிப்பு நிலைக்கு இருப்பு இல்லை. ஆழ்ந்த தூக்கத்தில் கனவு நிலை விழிப்பு நிலை ஆகிய இரண்டுமில்லை. கனவுநிலையிலும் விழிப்பு நிலையிலும் ஆழ்ந்த தூக்கத்துக்கு இருப்பு கிடையாது. ஆகவே மூன்று அவஸ்தைகளும் உண்மையற்றவை. அவை ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களால் உண்டாக்கப்படுகின்றன. பிரம்மம் அல்லது பரம் பொருள் மூன்று நிலைகளுக்கும் மௌனமான சாட்சியாகவுளது. அது முக்குணங்களுக்கும் கூட அப்பாற்பட்டது. அது புனிதமான ஆனந்தமாயும் பரிசுத்தப் பிரக்ஞையாகவும் உளது. அது நித்தியமான இருப்புள்ளது.

## 3. கனவு நிலையை ஆராய்தல்

ஒரு சமயம் ஒரு சிஷ்யன் தன் குருவை அணுகி அவருடைய பாத கமலங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துக் கைகட்டிக் கொண்டு வினவலானான் :-

சிஷ்யன் : எனது பூஜ்ய குருநாதா, இந்த ஜனன — மரண சக்கரத்தைக் கடப்பதற்கு எனக்கு ஒரு வழி கூறியருளுங்கள்.

குரு : எனது அன்புக்குரிய சிஷ்யா! நீ யார் என்பதை அறிந்து கொள்வாயானால் நீ ஜனன — மரணச்சக்கரத்தைக் கடக்கலாம்.

சிஷ்யன் : குருநாதா, என்னை அறிந்து கொள்ளாத முட்டாளல்ல நான். தன்னை அறிந்து கொள்ளாத மனிதன் பூமியிலேயே இல்லை; ஆனாலும் ஒவ்வொருவனும் ஜனன — மரண சக்கரத்தை அடைந்து கொண்டுதான் இருக்கிறார்கள்.

குரு : கிடையாது, கிடையாது நீ சரீரத்தின் இயல்பையும் சரீரம் யாருக்காக உத்தேசிக்கப்பட்டதோ அவனையும் உணரவேண்டும். அப்போதுதான் ஒருவன் தன்னை அறிந்தவனாகக் கொள்ளப்படுவான்.

சிஷ்யன் : இந்த சரீரத்திற்கு சொந்தமாக உள்ளவன் யார்?

குரு : இந்த தேஹம் (சரீரம்) தேஹிக்குச் (ஆத்மா) சொந்தமானது.

சிஷ்யன் : இந்த சரீரத்தைத் தவிர நான் வேறொன்றையும் காணவில்லை.

குரு : இந்த சரீரம் தூங்கும்போது உன்னுடைய கனவுகளை அனுபவித்தவன் யார்? இன்னும் ஆழ்ந்த தூக்கத்தில் அதில் இன்பங் கொண்டவன் யார்? நீ விழிக்கும் போது உலகத்தையும், உன் கனவுகளையும் ஆழ்ந்த நித்திரையின் அயர்ச்சியையும் அறிகின்றவன் யார்?

சிஷ்யன் : இந்த மூன்று நிலைகளிலும் இருப்புக் கொண்டுள்ள ஆத்மாவின் இயல்பைப் பற்றி இப்போதுதான் சிறிது யோசனை எனக்கு உண்டாகத் தொடங்குகிறது.

மேற்கண்ட குரு—சிஷ்ய சம்வாதத்தினால், நமது ஜாக்கிரத பிரக்ஞையைப் பற்றியாயினும் சிறிது அறிவு நமக்கு இருப்பதாக நாம் ஏற்கனவே பாவித்திருப்பதுபோல் ஆத்மாவின் உண்மையான இயல்பை உணர்வதன் பொருட்டு சுவப்ன நிலையும் சுழுப்தி நிலையும் கூட நாம் ஆராயத்தக்கவையே யென்று நமக்குத் தெளிவாகிறது.

ஆழ்ந்த தூக்கம் கலைவதே கனவு. அதனால் கனவின் உற்பத்தி, செயல், நோக்கம், பொருள் ஆகியவற்றின் ஆராய்ச்சி இயற்கையாகவே நம்மை ஆழ்ந்த தூக்க நிலையின் ஆராய்ச்சிக்கும் இட்டுச் செல்லும் ஒரு விஷயத்தை ஆராய்வதனால் அதன் வரலாற்றையும் சிறந்த ஆசிரியர்கள் அதை எவ்வாறு வளம் பெறச் செய்தார்கள் என்பதையும் அறிந்து, அவர்கள் கூறிய விஷயத்தை ஆழ்ந்து படித்து அதன் மீது நமது விமர்சன புத்தியைச் செலுத்தி விட்டுப் போனவைகளை நிறைவு பெறச் செய்யவேண்டும். அப்போது அவ்விஷயத்தைப் பற்றி நமக்குப் பூரணமான திருப்திகரமான ஆராய்ச்சி ஏற்படும்.

சமீபகாலத்திய நாகரீகத்துக்கு வேண்டியபடி ஒழுக்கத்தின் உருவத்தை நோக்கிப் புராதன இயற்கை ஆத்மாவை அடக்கி உருவாக்கும் பொருட்டு முன்னேறும் மார்க்கத்தில் உண்டாக்கப்பட்ட அறியப்படாத் மனயந்திர முறைகளைக் கனவு தன்னுள்ளேயே வெளிப்படுத்துகிறது. கனவு மனோபாவம் பணியாற்றும் இலட்சணமாக அறியப்படுவது. அதாவது கனவு யந்திரமுறையும் அறியப்படாத சங்கேத சித்தாந்தமும் . . . கனவின் அர்த்த விளக்கத்துக்கு அவசியமாகிறது. இந்த அறிவு இவ்விஷயத்தைப் பற்றி ஆராய்ந்தவர்களின் பிரமாண நூல்களினின்று புத்தி மூலம் கிரகிக்கப்படலாம். எனினும் சொந்த ஆராய்ச்சி

அனுபவத்தின் பயனாகத்தான் திட நிச்சயம் ஏற்படக்கூடும். வேறுபாடுடைய அனுபவக் களஞ்சியத்திலிருந்து தனிப்பட்ட மனோ பாவத்தின் பலன் என்று கனவுகள் கருதப்பட வேண்டும். அதை உண்மையில் கனவு காண்பவன் தான் அறிவதாகத் தன் அறிவில் நினைவு கூறவோ உணரவோ செய்வதில்லை.

கனவைப் பகுத்தறிவதில் அகங்காரத்தின் மூலம் பிரக்ஞையற்ற மனதின் உணர்வைக் கிரகிப்பது ஆத்மீக விவகாரத்தின் ஒரு இன்றியமையாத பாகம் என்று ஒருவன் கூறலாம். சரியான விளக்கத்துக்குரிய சித்தாந்தமாவது அம்மனிதன் நம்பும்படி அறிந்த முறைகளில் அறியாத விஷயத்தை வெளிப்படுத்துவதாம். கனவின் உண்மையான அர்த்த விளக்கம் யாவற்றிற்கும் இச்சித்தாந்தமே அடிப்படையானது.

ஆகவே கனவின் மதிப்பு வெளிப்பட்ட விஷயத்தைக் கொண்டு சமீப கால விஷயத்தை வெளியாக்குவதில் மட்டுமல்ல. கனவைக் கூறுவதிலும் சேர்ந்த விஷயங்களைத் தருவதிலும் உபயோகிக்கும் பாஷையே அதை விளக்குகிறது.

ஆதலால் 'கனவு' என்னும் விஷயமும் அதைப் பகுத்தறிதலும் மனிதனின் உண்மை இயற்கையை அறிவதில் வெகு ருசிகரமானது. ஆகவே நாம் பின்வரும் பக்கங்களில் அந்த விஷயத்தைப் பற்றிப் புகழ்படைத்த பிரமாண கர்த்தாவான ஸிக்மண்ட ப்ரூட் என்பவரின் (Sigmund Frewd) சொற்பொழிகளினின்று உசிதமாகத் திரட்டியவற்றை மேற்கோள்களாகக்காட்டி, அதை மேலும் அவசியமாயின் இந்திய ஞானிகள் முனிவர்களிடமிருந்து நமக்குக் கிடைக்கும் ஞானத்தின் உதவியால் பரிசீலனை செய்வோம்.

# 4. கனவு தத்துவம்

சில கர்மாக்கள் கனவுகளில் கூடச் செய்து தீர்க்கப்படுகின்றன. ஒரு அரசன் ஒரு சுவப்னத்தில் பிச்சைக்காரனாக நடித்துப் பசியின் கொடுமைகளில் உழன்று அனுபவமடைகிறான். இந்த அனுபவத்தில் அவ்வரசனின் சில தீவினைகள் நுகர்ந்து தீர்ந்து விடுகின்றன.

சில கிரகதோஷங்கள் காரணமாக ஒரு மனிதனுக்கு அரசனாவது சாத்தியமில்லாவிட்டால் அவன் சுவப்னத்தில் அரசனாகி விடுகிறான். அவனது ஆழ்ந்த ஆசை சுவப்ன அவஸ்தையில் உருப்பெறுகிறது.

சுவப்னத்தில் மனம் மிக யதேச்சையாகச் செயலாற்றுவதால் ஒருவன் இன்பக் கனவுகளைக் காணும்போது விழிப்பு நிலையைவிட கனவில் அதிக இன்பம் அடைகிறான்.

ஏப்ரல் 30ந் தேதி காலை நீ பம்பாய் போவதற்கு ஏற்பாடுகள் செய்திருந்தால், 27ந்தேதி இரவே நீ புகை வண்டி நிலையத்தில் டிக்கட்டு வாங்குவது போலவும் வண்டியில் ஏறுவது போலவும் பம்பாய் வண்டி நிலையத்தில் உன்னை வரவேற்பதற்குச் சில நண்பர்கள் வந்திருப்பது போலவும் நீ கனவு காணக்கூடும். ஜாக்கிரதா அவஸ்தையின் பலமான எண்ணங்கள் உடனே சுவப்ன அவஸ்தையில் உருப்பெறுகின்றன.

விழிப்பு நிலையில் ஒரு ஆழ்ந்த ஆசை நிறைவேறாவிடின் கனவில் நீ அந்த ஆசை நிறைவுபடக் காண்பாய். கனவு நிலையில் மனத்துக்கு அதிக சுதந்திரம் இருக்கிறது. அப்போது மனமானது மதயானை ஒன்று விடுபட்டது போல் இருக்கிறது.

# 5. கனவின் தத்துவம்

## I

"அவன் காற்றில் பறப்பதாகக் கனவு காண்கிறான்" என்பது போன்ற இந்த வாழ்க்கையில் ஒரு போதும் அநுபவத்துக்கு வரக்கூடாத பல விஷயங்களை ஒருவன் கனவு காண்கிறான்.

கனவு என்பது முழுதும் நூதன அனுபவமல்ல, ஏனெனில் அது பெரும்பாலும் நடந்த அனுபவங்களின் ஞாபகமே.

விழிப்பு நிலையில் ஆத்ம ஒளி அவயவங்கள், புத்தி, மனது, வெளி வெளிச்சங்கள், முதலியவற்றின் தொழில்களோடு சேர்ந்து இருக்கிறது. சுவப்னங்களில் அவயவங்கள் வேலை செய்யாததாலும் சூரியன் போன்று அவற்றிற்கு உதவி செய்யும் வெளிச்சங்கள் இல்லாததாலும் ஆத்மா வேறாக ஆகிறது.

கனவு காண்பவன் கனவு நிலையில் அவன் காணும் நன்மை தீமையின் பலன் எதுவாயிருப்பினும் அதனால் தாக்கப்படுவதில்லை. கனவில் செய்த பாவங்களுக்காக யாரும் தன்னைப் பாவியென்று எண்ணுவதில்லை. அவற்றைக் கேட்கும் ஜனங்கள் அவர்களைக் கண்டிப்பது மில்லை, ஒதுக்குவதுமில்லை. ஆகவே அவன் அவற்றால் பாதிக்கப்படுவதில்லை.

கனவு காண்பவன் கனவில் காரியங்களைச் செய்வது போல் தோன்றுகிறதே தவிர, உண்மையில் செயலே யில்லை. "அவன் மங்கையர் குழாத்தில் இன்புறுவது போல் காண்கிறான்" என்று சுருதி கூறுகிறது. (பிரஹதாரண்ய உபநிஷத் IV 3.13) சுவப்னத்தை விவரிப்பவன் "நான் இன்று ஒரு யானைக் கூட்டம் ஓடுவது போல் கண்டேன்" என்று 'போல' என்றும் சொல்லை உபயோகிக்கிறான். ஆகவே கனவு காணும் ஜீவனுக்குக் கனவுகளில் யாதொரு செயலும் இல்லை.

உருவமுள்ள சரீரமும், இந்திரியங்களும், உருவமுள்ள வேறு எதோடாவது சேர்க்கையடையும்போது ஒரு செயல் நடைபெறுகிறது. உருவமற்ற பொருள் எதுவும் செயலில் ஈடுபடுவதை நாம் ஒரு போதும் காண்பதில்லை. ஆத்மா உருவமற்றது. ஆகவே அது பற்றற்றது. இந்த ஆத்மா பற்றற்றதால், அது கனவுகளில் காண்பவற்றால் அசைக்கப்படுவதில்லை. ஆகவே நாம் அதோடு செயலைச் சம்பந்தப்படுத்த முடியாது. ஏனெனில் சரீரமும் இந்திரியங்களும் சம்பந்தப்படுவதால்தான் செயல் உண்டாகிறது. இந்த எல்லையற்ற ஆத்மா பற்றுதல் அற்றது. அதனால் அதற்கு சம்பந்தம் கிடையாது. ஆகவே அது அழிவற்றது.

வைத்தியர்கள் "யாரையும் திடீரென்று பலவந்தமாக எழுப்பக் கூடாது" என்கிறார்கள், ஏனெனில் சுவப்னங்களில் ஜாக்கிரதா நிலையின் சரீரத்திலிருந்து அவயவங்கள் மூலம் ஆத்மா வெளிச்சென்று தனித்து நிற்கிறது என்று அவர்கள் காண்கிறார்கள். ஆத்மா பலவந்தமாக எழுப்பப்பட்டால் அது அவயவங்களின் வாயில்களைக் கண்டு பிடிக்க முடியாது. அவன் சரியான அவயவத்தைக் காணாவிட்டால் சரீரம் சிகிச்சைக்குக் கடினமாகிறது. அவயவங்களின் பிரகாசிக்கும் தொழில்களைக் கைக்கொண்டு தான் அனுப்பின பொருள்களை ஆத்மா அவயவங்களின் வாயில்களுக்குத் திரும்பிக் கொண்டு சேர்க்க முடியாது. அல்லது அத்தொழில்களை இடம் மாற்றி வைத்துவிடலாம். அப்படியாயின் குருடு செவிடு முதலிய குறைகள் உண்டாகலாம். அவற்றிற்குச் சிகிச்சை செய்வது வைத்தியனுக்குக் கடினமாயிருக்கும்.

III

ஜாக்கிரதா நிலையில் மனதில் உண்டாகும் சுவடுகள் (வாசனைகள்) காரணமாகக் கனவுகள் உண்டாகின்றன. கனவில் உண்டாகும் பிரக்ஞை (அறிவு) ஜாக்கிரதா

நிலையில் ஏற்கனவே அடையப்பட்டிருக்கும் அறிவை ஆதாரமாகக் கொண்டது.

தூங்குபவனுக்கு அவனது நல்வினை தீவினைகளுக்குப் பதில் செய்யும் பொருட்டு அவனை உற்சாகப்படுத்துவதையோ துக்கமூட்டுவதையோ பயமுறுத்துவதையோ கனவுகள் நோக்கமாகக் கொண்டிருக்கின்றன. இவ்வாறு அவனது அதிருஷ்டம் கனவுகளுக்குத் தக்க காரணமாக இருக்கிறது.

ஸ்வப்ன நிலையில் கூட ஆத்மாவின் கருவிகள் முழுதும் ஓய்ந்து போவது இல்லை. "கனவு ஆகி, புத்தியுடன் அது இவ்வுலகத்துக்கு அப்பால் செல்கிறது" என்று அது அப்போதும் புத்தியோடு இணைக்கப்பட்டுத்தான் இருக்கிறது என்று சுருதிகள் கூறுகின்றன.

ஸ்மிருதியும் "இந்திரியங்கள் ஓய்வடைந்தும், மனம் ஓய்வடையாமல் வஸ்துக்களுடன் ஈடுபட்டிருக்கிறது. அந்நிலையைக் கனவு என்று அறிவாய்" என்று கூறுகிறது.

சுருதி, ஆசைகள் முதலியவை மனிதன் மாறுபாடுகள் என்கிறது (பிருஹ. உப I 5 -3) கனவில் ஆசைகள் காணப்படுகின்றன. ஆதலால், கனவுகளில் ஆத்மா மனதுடன் சேர்ந்து இங்கு மங்கும் அலைகிறது.

கனவுகளில் நம்முடைய செயல்களை விவரிக்கும் போது சுருதி 'இருப்பது போல' என்று அடைமொழியைச் சேர்க்கிறது. மங்கையரோடு கூடி ஆனந்திப்பது போல், சிரிப்பது போல் பயங்கரக் காட்சிகளைக் காண்பது போல்" என்கிறது (பிருஹ உப IV 3-13). "நான் மலையுச்சிக்கு ஏறினது போல் கண்டேன்", "நான் ஒரு மரத்தைப் பார்த்தது போலிருந்தது" என்று சாதாரண ஜனங்கள் கூட அதே முறையில் கனவுகளை விவரித்திருக்கிறார்கள்.

ஸ்வப்ன சிருஷ்டி உண்மையற்றது. உண்மையானால் காலம், இடம், உற்பத்தி ஆகிய பாகுபாடுகள் இருத்தல்

வேண்டும். தவிர, உண்மை மறுக்கப்படவாவது மூடத்தனம் என்று நிரூபிக்கப்படவாவது முடியாது. சுவப்ன சிருஷ்டிக்கு இந்த இலக்ஷணங்கள் இல்லை.

சுவப்னம் "சந்த்யா" அல்லது இடைநிலையென்று கூறப்படுகிறது. ஏனெனில் அது விழிப்பு நிலைக்கும் ஆழ்ந்த தூக்க நிலைக்கும் அதாவது ஜாக்கிரதத்துக்கும் சுழுப்திக்கும் இடையில் இருக்கிறது.

III

சுவப்னங்கள் விசித்திரமாகவும், மாயமான இயல்புடையனவாகவும் இருந்தபோதிலும், அவை கனவு காண்பவனுடைய உயர்ந்த அல்லது தாழ்ந்த ஆத்மீக ஒழுக்க நிலையையோ நன்றாகக் கட்டிக் காண்பிக்கின்றன. "தூய இருதயமும் மாசற்ற குணநலமும் உள்ள ஒருவன் ஒரு போதும் குற்றமுள்ள கனவுகளைக் காணமாட்டான். எப்போதும் தியானத்தில் ஆழ்ந்திருக்கும் சாதகன் தன் சாதனத்தைப் பற்றியும் தியான இலட்சியத்தைப் பற்றியுமே கனவு காண்பான். அவன் சமஸ்கார பலத்தின் காரணமாகக் கனவில் கூட பகவானை ஆராதித்து. நாமத்தையும் மந்திரத்தையும் ஜபிப்பான்.

## 6. கனவு காண்பவன் யார்?

இவ்வுலகத்தில் எந்த மனிதனையாவது "விழித்துக் கொள்பவன் யார்? கனவு காண்பவன் யார்? தூங்குபவன் யார்?" என்று கேட்டால், அவன் "விழிப்பவன் நான், கனவு காண்பவனும் நான், தூங்குபவனும் நானே" என்று பதில் கூறுவான். "இந்த நான் என்பது என்ன?" என்று நீ கேட்பாயானால் அவன் "இந்தச் சரீரமே 'நான்' என்று கூறுவான். மூளை களைத்துக் கலவரம் அடையும்போது சரீரம் தான் கனவு காண்கிறது. அயர்ந்த நித்திரைக்குப் பிறகு மூளையின் களைப்பு தீர்ந்தபோது தேகம் விழித்துக் கொள்கிறது.

மனத்தைப் பற்றிச் சிறப்பாக ஆராய்ந்துள்ள மனோ விஞ்ஞானி மூளையில் இருப்புக் கொண்டிருக்கும் மனம் தான் "நான்" என்று கூறுவான். அவன் மூளையை விட்டு மனத்தை வேறுபடுத்த முடியாது என்றும் அது ஸ்தூல சரீரத்தோடு வசிக்கிறது என்றும் கூறுகிறான்.

மனோதத்துவ சாஸ்திரிகளும் அத்யாத்மவாதிகளும் சரீரம் இறந்த பிறகும் மனது தொடர்ந்து எங்கேயோ இருந்து கொண்டு தான் இருக்கிறது என்று கூறுகிறார்கள். மனோ விஞ்ஞானிகள், மனோதத்துவ சாஸ்திரிகள் அத்யாத்ம வாதிகள் இவர்கள் கூற்றுப்படி மனதுதான் விழித்துக் கொள்கிறது, கனவு காண்கிறது, தூங்குகிறது இம்மனது தான் "நான்" ஆகும்.

தர்ம சாஸ்திரவாதி சரீரத்தை விட்டு முழுதும் தனிப்பட்ட ஒரு ஆத்மா உள்ளது. இந்த ஆத்மாதான் "நான்" என்பது என்றும் கூறுகிறான். இந்த ஆத்மா கர்ம விதிப்படி இன்னொரு சரீரத்தில் புகுகிறது.

வேதாந்தியோ இந்தச் சரீரம் அல்லது மனம் அல்லது ஆத்மாவே 'நான்'. எல்லா ஜீவன்களிலும் எல்லையற்றதும், நித்தியமானதும், சர்வ வியாபியும், சுயமாக இருப்புள்ளதும், சுயம் பிரகாசமானதும், தன்னில்தான் அடங்கினதும், பின்ன மற்றதும், கால தேசமற்றதும், ஜனன மரணமற்றதும் ஆன ஒரு புனிதமான ஞானம் அல்லது ஆத்மா இருக்கிறது. இதுவே உண்மையான "நான்" இந்த "நான்" ஒரு போதும் விழித்துக்கொள்வதும் இல்லை, கனவு காண்பதுமில்லை தூங்குவதுமில்லை. அது எப்போதும் விழிப்பு, கனவு தூக்கம் ஆகிய மூன்று நிலைகளுக்கும் மௌனமான சாட்சி. (பார்ப்பவன்). அது துரியம் அல்லது நான்காம் நிலை. மூன்று நிலைகளையும் கடந்ததே அந்த நிலை.

அஹங்காரம் எனப்படும் பொய்யான அல்லது விவகார நிலையுள்ள 'நான்' அல்லது அந்த ஜீவன்தான் விழித்துக் கொள்கிறான், கனவு காண்கிறான் அல்லது தூங்குகிறான்.

விழித்திருப்பவன், கனவு காண்பவன், தூங்குபவன் ஆகியோர் அனைவரும் மாறுதலடையும் ஆட்கள், பொய்யானவர்கள்.

உண்மையான ஆத்மா, உண்மையான "நான்" ஒரு போதும் விழித்துக் கொள்வதும் இல்லை, கனவு காண்பதுமில்லை தூங்குவதுமில்லை. பூரண உண்மை அல்லது பாரமார்த்திக உண்மையான நோக்கில் பார்த்தால் யாரும் விழித்திருப்பதுமில்லை, கனவு காண்பதுமில்லை, தூங்குவதுமில்லை.

## 7. கனவு வஸ்துக்களையும் பகவான் படைக்கிறார்
### (மற்றொரு அபிப்பிராயம்)

ரதங்கள் முதலியவற்றைக் கனவில் படைத்திடுவது உண்மையில் பகவானே. மனிதனது ஆத்மா அல்ல என்று சில இந்திய தத்துவ சாஸ்திரிகள் வாதிக்கிறார்கள். ஜீவனின் அற்பவினைகளின் பல அனுபவத்திற்காக பகவானால் கனவு வஸ்துக்கள் படைக்கப்படுகின்றன. மிகவும் அற்பமான கர்மாக்களுக்காக ஆத்மாவுக்குப் பரிசு அளிக்கும் பொருட்டு, பகவான் கனவுகளை உண்டாக்குகிறான்.

கதகர்கள் என்ற ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்கள் தங்கள் சூத்திரத்தில் கனவுநிலையில் கனவு கண்பவர்களுக்குச் சகல கர்மாக்களையும் படைப்பவர் பரமாத்மாவே என்று புகழ்கிறார்கள். (கடோபநிஷத் V. 8.)

"நாம் தூங்கும்போது நம்முள் விழித்துக் கொண்டிருக்கும் அவன், அதாவது அப்பரம் புருஷன் ஒரு அழகிய காட்சிக்கு அடுத்து இன்னொன்றாக உருவாக்குபவன், உண்மையான பிரகாசமுள்ளவன், அவனே பிரம்மன். அவனே அழிவற்றவன் எனப்படுகிறான். உலகங்கள் யாவும்

அவனுள் அடங்கியுள்ளன. அவனுக்கப்பால் ஒருவரும் சொல்வதில்லை. இதுவே அது".

மாயை அல்லது பகவத் சங்கல்பத்தின் மூலம்தான் அவன் கனவுப் பொருள்களைப் படைக்கிறான். அவை ஸ்தூலப் பொருள்களால் ஆக்கப்படவில்லை. ஏனெனில் எல்லோருக்கும் அவை தென்படாமல் கனவு காண்பவனால் மட்டுமே பார்க்கப்படுகின்றன.

ஆத்மாவுக்கு பந்தத்தையும் மோட்சத்தையும் விளைவிக்கக் கூடிய அவன் ஆத்மாவுக்குக் கனவையும் அதன் நீக்கத்தையும் எளிதில் விளைவிக்கக்கூடும். அதில் ஆச்சரியம் ஏதுமில்லை. கூர்ம புராணம் கூறுவது "அவன் தான் (பகவான்) ஆத்மாவை கவப்ன சிருஷ்டி முதலியவற்றைக் காணும்படி செய்கிறான். அவனே அவற்றை அவனது பார்வையினின்று மறைக்கிறான். ஏனெனில் அவனுடைய சங்கல்பத்தின் மீதுதான் இதன் பந்தமும் மோட்சமும் சார்ந்திருக்கின்றன.

## 8. பின்வருவதைத் தெரிவிக்கும் கனவுகள்

சில சமயங்களில் கனவுகள் வரப்போகும் அதிருஷ்டத்தையோ துரதிருஷ்டத்தையோ தெரிவிக்கின்றன. சுருதி உபதேசிப்பது "ஏதோ ஒரு வேலையில் ஈடுபட்டுள்ள மனிதன் ஒரு இஷ்ட பூர்த்தியை விரும்புபவன், தன் கனவுகளில் ஒரு மங்கையைக் காண்பானானால் அந்தக் கனவுக் காட்சியிலிருந்து வெற்றி கிடைக்கும்" என்று அறியலாம். "வெண்கலத்தாலோ அல்லது மண்ணினாலோ ஆக்கப்பட்ட உணவு பாண்டத்தைக் கழுவியபிறகு, அவன் அக்கினியின் பின்புறத்தின் தோலின்மீதோ அல்லது வெறுந்தரைமீதோ மௌனமாகவும் தனியாகவும் படுத்துக்கொள்ளட்டும். அவன் தன் கனவுகளில் ஒரு மங்கையைக் காண்பானாயின், இது தனது யக்ஞம்

வெற்றியளிக்கும் என்பதற்கு இது ஒரு சகுனம் என்று உணரட்டும்". (சாந்தோக்ய உபநிஷத் V 2-89)

வேறு சாஸ்திர வாக்கியங்கள் சில சுவப்னங்கள் சீக்கிர மரணத்தைக் குறிக்கின்றன என்று கூறுகின்றன. உதாரணம், "அவன் கருமையான பற்களுள்ள கருத்த மனிதனைக் காண்பானேயானால், அம்மனிதன் அவனைக் கொல்வான்". (கௌஸீகப் பிரமாணம்)

கனவு சாஸ்திரத்தை ஆராய்ந்தவர்கள் யானை மீது சவாரி செய்வது போன்ற கனவு காண்பது அதிருஷ்டம் என்றும், கழுதைமீது சவாரி செய்வது போல் கனவு காண்பது துரதிருஷ்டம் என்றும் அபிப்பிராயம் கொள்கிறார்கள்.

சிவபெருமான் விஸ்வாமித்திரருக்குக் கனவில் "ராமாகைஷ" என்ற மந்திரத்தை உபதேசித்தார். விஸ்வாமித்திரர் காலையில் தூக்கத்திலிருந்து விழித்ததும் அதை அப்படியே எழுதிக்கொண்டார்.

செய்யுட்கள் முதலிய மேதாவிகளின் செயல்கள் கனவுகளில் காணப்படுகின்றன. நோய்க்கு நிவிருத்திகள் கனவில் தெரிவிக்கப்படுகின்றன. சில சமயங்களில் கனவுகளில் காணப்பட்ட அதே பொருள் பிறகு ஜாக்கிரத நிலையிலும் காணப்படுகிறது.

கனவு சாஸ்திரத்தைக் கண்டறிந்த வியாஸரும் மற்றைய முனிவர்களும் "ஒரு பிராம்மணன் அல்லது ஒரு தேவதை, ஒரு எருது அல்லது ஓரரசன் கனவில் ஒருவனுக்கு என்ன கூறினாலும் அது சந்தேகமின்றிப் பலிக்கும்" என்று கூறுகிறார்கள்.

இராமானுஜர் "கனவு பிம்பங்கள் பகவானாலேயே படைக்கப்படுவதால் அவற்றிற்குபின் வருவதைத் தெரிவிக்கும் சக்தி உண்டு" என்று உறுதி கூறுகிறார்.

## 9. கனவின் மூலம் ஆத்மீக ஒளி

"எவன் தன்னுள்ளே இன்பம் உடையவனோ, ஆத்மானந்தத்தை அனுபவிப்பவனோ, அவ்வாறே எவன் உள்ளொளி உள்ளவனோ, - அந்த யோகியே பிரம்மத்தில் ஐக்கியமாகி சாந்தி சொரூபமான பிரம்மத்தில் முக்தி அடைகிறான்". (பகவத் கீதை V 24.)

உயர்ந்த ஆத்மஞானம் தன்னைப்பற்றி உணர்வதே. தன்னைத்தானே அதாவது தன் ஆத்மாவையே அறிந்தவனுக்கு அறியக்கூடியது வேறொன்றும் இல்லை. மேனாட்டுத் தத்துவ ஞானிகளில் அறிவிற் சிறந்தவரான சோகரதர் தனது மாணவர்களுக்கு ஊட்டிய உயர்ந்த உபதேசம் "உன்னை உணர்ந்துகொள்" என்பதே. அதே போல் இந்திய ஞானிகளும் தங்கள் உயர்ந்த உபதேசத்தை அத்யாத்ம வித்தை அல்லது ஆத்மஞானம் என்ற உருவத்தில் அளித்தார்கள்.

எல்லாக் காலங்களிலும் அறிஞர்களால் உயர்ந்த ஞானமென்று கூறப்பட்ட ஆத்மஞானம், சாதாரண மனிதனால் இரகசியமென்று எடுத்துக் கொள்ளப்படவில்லை எனலாம். அவன் தன்னை நன்கறிந்தவனாகக் கொள்வதால் தன்னைப் பற்றிச் சிந்திப்பது அவசியமென்று கூட அவன் கருதுவதில்லை. தன்னைப்பற்றிச் சிந்தனை செய்வது பயனற்றது என்று கல்வியறிவும் எழுத்து வாசனையும் இல்லாத பாமரன்தான் நினைக்கிறான் என்பதல்ல. உயர்ந்த பண்பாடுள்ள தற்கால மனிதன்கூட அவ்வாறே கல்வியும் விஞ்ஞானமும் எவ்வளவுக்கு அதிகமாக முன்னேறியிருக்கிறதோ, அவ்வளவுக்கு தற்கால மனிதனுக்குத் தன்னை உணர்வதில் ஆவல் குறைந்துவருவதை நாம் காண்கிறோம்.

ஒரு மனிதன்மீது சிந்தனை செலுத்தாமலிருப்பதற்கு இரண்டு எதிரிடையான காரணங்கள் உள; முதலாவது அவன், தான் தன்னை நன்குணர்ந்திருப்பதாக

நினைக்கிறான். இரண்டாவது ஆத்மாவின் உண்மை இயல்பு ஒரு போதும் உணர இயலாததால் தன்னைப்பற்றிச் சிந்திப்பது பயனில்லையென்று அவன் எண்ணுகிறான். தன்னைப் பற்றிச் சிந்திப்பது ஆரோக்கியமற்ற மனோபாவம் என்று சிலர் எண்ணுகிறார்கள். உள்நோக்கின் ஒரு வடிவமாகிய இதனின்று கூடிய சீக்கிரம் ஒருவன் தன்னை விடுவித்துக் கொள்ளுதல் வேண்டும். இப்படிப்பட்ட தப்பபிப்பிராயத்தைக் கனவுகளின் ஆராய்ச்சி நிவர்த்திக்கும்.

நமது கனவுகளைப்பற்றி எவ்வளவுக்கெவ்வளவு குறைவாக ஆலோசிக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது என்று ஒரு காலத்தில் மனோவிஞ்ஞானிகள் எண்ணியதுண்டு. உணர்வை ஒரு வெளித் தோற்றம் என்று கொள்ளும் மனோ விஞ்ஞானிகள் இன்னும் இதே கொள்கையைத்தான் வலியுறுத்துகிறார்கள். உதாரணமாக ஸீஷோர் என்பவர் இயற்கைக்கு மாறான மக்களே தங்கள் கனவுகளைப் பற்றி அதிகமாக யோசிப்பார்கள் என்றும், கனவுகளைப் பற்றி அதிகமாக யோசிப்பதால் இயற்கைக்கு மாறான இயல்புகள் விளையும் என்றும் எண்ணுகிறார். ஜாக்கிரத வாழ்வில் கவனிக்கவேண்டுவது அதிகம் இருக்கையில் கனவுகளைப் பற்றிச் சிந்திப்பதில் பொழுதை வீண் போக்குபவன் தன் ஜாக்கிரதவாழ்வில் அதிகபாகத்தைத் தவறவிட்டுவிடுகிறான். அதனால் வாழ்க்கையில் அவனுக்குத் தோல்வி உண்டாகிறது.

நூதன விஞ்ஞானம் இந்த திருஷ்டி கோணத்தை மாற்றிவிட்டது. கனவுகளை விசாரணை செய்வதன் மூலம் ஆழ்ந்த அறிவு வருகிறது என்று அது காட்டுகிறது. தனது கனவுகளை ஆராய்ச்சி செய்யாதவன் எவனும் தன்னை உண்மையாக உணர்ந்தவன் அல்ல. கனவுகளின் ஆராய்ச்சியானது நமது ஆத்மா எவ்வளவு பெரிய மர்மம் என்பதையும் சில மனோதத்துவ சாஸ்திரிகள் எண்ணியது போல் இந்த மர்மம் முழுவதும் விடுவிக்க முடியாததல்லவென்றும் உடனடியாகக் காட்டுகிறது. கனவுகள்

தற்காலிக ஞானத்தை கடந்த நமது இயல்பின் அந்த நிலையை நமக்கு வெளிக்காட்டுகின்றன. மிகுந்த பகுத்தறிவும் நன்னெறியும் உள்ள மனிதனிடம் கூட மூர்க்கமும் துராசாரமும் கூடிய ஒரு உயிர்நிலை உள்ளது என்பதை, தனது கனவுகளின் மூலமே ஒருவன் உணரக் கூடும். நமது கனவுகளைச் சிந்தித்தவுடன் பகுத்தறிவிலும் நன்னெறியிலும் நாம் கொண்டுள்ள பெருமையனைத்தும் சூரியனைக்கண்ட பனிபோல் இளகி மறையும்.

நம்முடைய கனவுகளில் தர்க்கரீதி இருக்கிறது. அல்லது நமது விழிப்பு நிலையின் பிரக்ஞையின் தர்க்கரீதி கனவின் தர்க்கரீதியைப் போலவே இருக்கிறது. ஹெஜல் என்னும் பெரிய தத்துவஞானி கனவின் தர்க்கரீதி வெளிப்படுத்துவதை கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் தன்னுடைய தர்க்க நூலை அமைத்தார். தர்க்க சாஸ்திரம், அதே சமயத்தில் மனோதத்துவ முறையாகவும் கருதப்படுவதானது, கனவு அனுபவத்தின் விபரீத அமைப்புகளையும் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளாமல் நிறைவு பெற்றதாக ஆகாது. தர்க்க சாஸ்திரமென்பது புத்தியை விழிப்பு அனுபவத்தை மட்டும் விசாரணை செய்ய உதவும் புத்தியின் ஒரு கருவியே. இவ்விஷயம் நம்முடைய கனவுகளின் ஆராய்ச்சியின் மூலம் நமக்குப் புலனாகிறது. உண்மை தர்க்கரீதியான பாகுபாடு களனைத்தையும் கடந்ததாயிருக்கவேண்டும். அல்லது அது எப்பாகுபாடுகளால் உணரப்பட இயலுமோ அவை விழிப்பு அனுபவத்தைப் பிடிப்பதோடன்றி கனவு அனுபவத்தையும் பிடிக்கப் போதுமானவையாயிருக்க வேண்டும். இதன் பொருள் யாதெனில் அது மனிதனுடைய பிரக்ஞையோடு கூடிய வாழ்க்கை. பிரக்ஞையற்ற வாழ்க்கை இரண்டையும் உணர்வதற்குப் போதுமான அளவு விசாலமாக இருக்கவேண்டும். அப்படிப்பட்ட பாகுபாடு அவசியம். ஜாக்கிரதப் பிரக்ஞையையும் கனவுப் பிரக்ஞையையும் கடத்தல் வேண்டும். கனவுகளை நாம் சிந்திக்கத்

தொடங்கும்போது சகஜஞானம் அல்லது ஒரு தர்க்கரீதியான ஆலோசனையின் அவசியத்தை நாம் உணர்கிறோம்.

கனவுகளின் தற்கால ஆராய்ச்சி, அவை அர்த்தமற்ற தோற்றங்களல்லவென்று காட்டுகிறது. ஒவ்வொரு கனவுத் தோற்றத்துக்கும் பொருள் உண்டு. கனவு என்பது தெரியாத ஒரு மொழியில் எழுதப்பட்டுள்ள கடிதம் போன்றது. சீன பாஷை அறியாத ஒரு மனிதனுக்கு அந்த பாஷையில் எழுதப்பட்டுள்ள கடிதம் ஒரு அர்த்தமற்ற காகிதச் சுருளாகும். ஆனால் அந்த பாஷையை அறிந்த ஒருவனுக்கு அது பெருமதிப்புள்ள விஷயம் நிறைந்ததாகிறது. அக்கடிதம் உடனடியாக ஒரு காரியம் செய்யச் சொல்வதாக இருக்கலாம்; அல்லது துக்கத்தில் ஆழ்ந்திருப்பவனுக்கு ஆறுதல் அளிக்கும் சொற்களடங்கியிருக்கலாம். அது ஒரு பயமுறுத்தும் கடிதமாயிருக்கலாம். அல்லது அன்பைக் கூறுவதாக இருக்கலாம். அக் கடிதத்தை கவனித்து அதை விளங்கிக் கொள்ள முயற்சி செய்பவனுக்குத்தான் இந்த அர்த்தங்கள் அதில் இருக்கின்றன. ஆனால் அந்தோ! நமது சொந்த உணர்வில் காணாத ஆழ்கடலினின்றுவரும் இச்செய்திகளை நம்மில் வெகு சிலரே அறிய முயல்கின்றனர்.

நாம் ஏன் கனவு காண்கிறோம்? இந்தக் கேள்விக்குப் பல்வேறு விடைகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. சர்வப் பிரசித்தமான விஞ்ஞானக் கொள்கைப்படி கனவுகள் நமது விழிப்பு அனுபவங்கள் மறுபடி ஒரு புதிய உருவத்தில் தோன்றுவதைத் தவிர வேறொன்றுமல்ல. சரீரத்தில் எங்கோ ஒரு அவயவம் கோளாறின் காரணமாக அதிலும் முக்கியமாக இரைப்பைக் கோளாறின் காரணமாக அவைகள் உண்டாகின்றன என்று அதிக ஆலோசனை மூலம் கூறப்படும் கொள்கையை மற்றவர்களைக் காட்டிலும் வைத்தியர்கள் விடாப்பிடியாகக் கொண்டிருக்கிறார்கள். சில சமயங்களில் வரப்போகும் வியாதிகள் கனவுகளில் தோன்றுகின்றன. நோய்வாய்ப் பட்டிருக்கும்போது உண்டாகும் கனவுகள் தேக ஆரோக்கிய நிலையில்

உண்டாகும் கனவுகளைவிட மிகப் பயங்கரமாயிருக்கின்றன. இவை கனவுகளைப்பற்றிய விஞ்ஞான சித்தாந்தங்கள் ஈண்டு நாம் விஞ்ஞான சம்பந்தமற்ற சித்தாந்தங்களை அகற்றிவிடுகிறோம். உதாரணமாக கனவுகள் முன் எச்சரிக்கைகள் அல்லது தேவதைகளோ, பேய்களோ, ஆவிகளோ கனவுகளை உண்டாக்குகின்றன, அல்லது கனவுகளில் ஆத்மா வெளியே சஞ்சாரம் செய்கிறது முதலிய கொள்கைகள்.

டாக்டர் ஸிக்மண்ட் ஃப்ராயிட் என்பவர் தமது கனவு விளக்கத்தில் விஞ்ஞான சித்தாந்தங்களை முற்றிலும் வெளியாக்கிவிட்டார். சரீரத்துக்கு உள்ளிருந்தோ வெளியிலிருந்தோ எந்த சரீரத் தூண்டுதலும் சரி, விழிப்புநிலை அல்லது கனவு நிலையின் அனுபவமும் சரி, கனவு விஷயத்தின் உண்மைத் தோற்றத்தை விளக்க முடியாது. ஒரே தூண்டுதல் அதாவது எச்சரிப்புக் கடிகாரத்தின் ஓசை ஹைட்டரெண்ட் என்பவருக்கு வெவ்வேறு சமயங்களில் மூன்று வெவ்வேறு வகையான கனவுகளை உண்டாக்கின. சரீரத் தூண்டுதல் மட்டுமே கனவுகள் உண்டாவதற்குக் காரணமாயின் இஃதெப் படியாகும்?

ஃப்ராயிட் கொள்கைப்படி எந்தவித விலக்கின்றி எல்லாக் கனவுகளும் ஆசை நிறைவேற்றமே. ஆசைகள் உண்மையில் தீய ஒழுக்கத்தின் இயல்புடையவை. அவைகளின் தோற்றத்தைக் கட்டுப்படுத்தும் தர்ம புத்திக்கு அவை எதிரிடையானவை. இந்த நியாய புத்தியிடமிருந்து தப்பித்துக் கொள்ளும் பொருட்டு ஆசைகள் மாறுவேடங்களில் தோன்றுகின்றன. கனவு யந்திரம் மிகச் சிக்கலானது. கனவுகள் ஆசைகளின் ஒரு அம்சம் பூர்த்தியாவதே. அவை மனத்தின் முறுக்கைத் தளர்த்தி அதன்மூலம் நாம் நித்திரையை நுகரும்படி உதவி செய்கின்றன. அவை பலமுள்ள கிளர்ச்சிகள் அளவுக்கு மீறாதபடி அடக்கும் முறைகளாம். கனவுகள் தூக்கத்தைக்

கலைப்பவையல்ல; அவற்றைக் காக்கவே செய்கின்றன. கனவுகளின் அறிவின்மையும் நெறியின்மையும் நமது விழிப்பு நிலையின் நன்னெறியையும் பகுத்தறிவையும் சாத்தியமாக்குகின்றன.

ப்ருட்டின் மேற்கண்ட கூற்று கனவில் நாம் நமது மிருக இயல்பை அறிகிறோம் என்று காட்டுகிறது. ஆத்மீக வாழ்வு கனவில் வெளிப்படுத்தப்படுவதைப் பற்றி அவர் யாதும் கூறினாரில்லை. இது ஜங்க் என்பவரால் சொல்லப்பட்டதாகத் தோன்றுகிறது. ஜங்கின் கொள்கைப்படி ப்ருட்டினால் எண்ணப்பட்டது போல் கனவு யதேச்சையாக உண்டாக்கப்படுவதல்ல. அது ஆதிகாரணத்திலிருந்து நிர்ணயிக்கப்படுகிறது. அடக்கப்பட்ட ஆசைகள் மட்டுமே நம்முடைய கனவுகளுக்கு காரணம் என்று கூறமுடியாது. கனவு நமது விழிப்பு உணர்வுக்கு ஒரு உரிமையை அளிக்கிறது. சரியான முறையில் விளக்கப்பட்டால், அது நம்முடன் நாம் சாந்தியோடு இருப்பதற்கு வழிகாட்டுகிறது. நரம்பு நோயாளிகள் காணும் கனவுகள் அடக்கப்பட்ட ஆசைகளை வெளிப்படுத்துவது மட்டுமல்ல, நோய் நிவர்த்திக்கும் சிகிச்சைகளைக் கூறுகின்றன. சில சமயங்களில் ஒரு நோயாளிக்குத் தொடர்ந்து கனவுகள் உண்டாகி நோய் நீக்கத்துக்கு வழி காட்டுகின்றன.

பலவிதங்களில் கனவுப் பிரக்ஞை ஜாக்கிரதப் பிரக்ஞையை விட உயர்ந்ததாயுள்ளது. வாழ்க்கையின் பல புதிர்கள் கனவுகளிலிருந்து குறிப்புகள் மூலம் நிவர்த்திக்கப்பட்டிருக்கின்றன. ஆடவர் கொள்கைப்படி கனவுகள் யாவும் இயல்பில் எதிர்பார்ப்பவைகளாயிருக்கின்றன. அவை எம்மார்க்கத்தில் ஒரு மனிதனின் ஆத்மீக வாழ்க்கை ஓடுகிறது என்பதைக் காட்டுகின்றன. உண்டாக்கக்கூடிய தவறுகளைத் திருத்துவதற்கு உள்ளபடி ஓட்டத்தை உணர்வது அவசியமாகிறது. கனவுகள் தனிமனிதனின் வாழ்க்கை ரேகையை நாம் அறிவதற்கு உதவுவதோடு தன்னைத்தான் திருத்திக்கொள்வதற்கு

அவனுக்குத் தக்க புத்திமதியை நாம் கூறுவதற்கும் உதவுகிறது.

இவ்வாறு சுவப்பனங்களின் மூலம் ஒருவன் ஒரு குறிப்பிட்ட நிலைமையில் எவ்வாறு செயலாற்ற வேண்டுமென்று அறியக்கூடும். விழிப்பு உணர்வுக்குத் தெரியாத ஒரு வழியைக் கனவுகள் சுட்டிக்காட்டுகின்றன. இக்கட்டான சமயங்களில் மகான்களும் ஞானிகளும் கனவுகளில் தோன்றி வழிகாட்டுகிறார்கள். ஒருவன் எவ்வளவுக்கெவ்வளவு கனவின் சகஜஞானத்தைக் கடைப்பிடிக்கிறானோ, அவ்வளவுக்கவ்வளவு அவை தெளிவாகின்றன.

## 10. விழித்திருப்பது கனவைப் போன்றது

விழிப்பு, கனவு ஆகிய இருநிலைகளிலும் வஸ்துக்கள் பார்க்கப்படுகின்றன. அதாவது கர்த்தா விஷயத்தொடர்புடன் இணைக்கப்பட்டிருக்கிறது. இதுவே இரண்டுக்கும் ஒற்றுமை.

கனவில் பொருள்கள் சரீரத்துள் இடத்தில் காணப்படுவதும் விழிப்பு நிலையில் அவை சரீரத்துக்கு வெளியிடத்தில் காணப்படுவதும், இருநிலைகளுக்கும் உள்ள ஒரே வேற்றுமை. "பார்க்கப்படுவதும்" அவற்றால் விளையும் பிரமையும் ஆகிய விஷயம் இருநிலைகளுக்கும் பொதுவானது. இருநிலைகளின் பிரமை அவைதன்னை விட வேறான "பொருள்களாகப்" "பார்க்கப்படுவதினின்று" நிச்சயமாகிறது. பார்ப்பது என்றால் தொடர்பு, தொடர்பு நிலையற்றது. ஏனெனில் விழிப்பு நிலையின் தொடர்புகள் கனவு நிலையின் தொடர்புகளாலும் கனவு நிலையில் தொடர்புகள் விழிப்பு நிலையின் தொடர்பாலும் மறுக்கப்படுகின்றன. ஆகவே "பார்க்கப்படும்" பொருள் எதுவும் உண்மையற்றது. துவைதம் உண்மையற்றதானதால், பொருள்கள் யாவும் உண்மையற்றவையே.

கனவு நிலைத்திருக்கும் வரையில் விழிப்பு உண்மையற்றது; விழிப்பு நிலைத்திருக்கும் வரையில் கனவு உண்மையற்றது. ஒன்றின் உண்மைநிலை மற்றொன்றின் உண்மை நிலையைப் பொறுத்தது, ஆனால் கனவு பொய் என்று நிருபிக்கப்படுகிறது; ஆகவே விழிப்பும் பொய்யே.

கனவுத் தொடர்புகள் விழிப்புத் தொடர்புகளால் மறுக்கப்படுகின்றன. விழிப்புத் தொடர்புகள் அதிப் பிரக்ஞையால் மறுக்கப்படுகின்றன. அதிப் பிரக்ஞையால் மறுக்கப்படவில்லை. மறுக்கப்படாததுதான் உண்மைக்குப் பிரமாணம்.

சதாகாலமும் நிலைத்து நிற்பது உண்மையானது. நிலையற்றதாய் ஆதியும் அந்தமும் உள்ளது பொய்யானது. கனவு, விழிப்பு இரண்டுக்கும் ஆதியும் அந்தமுமுண்டு. ஆனால் தொடக்கத்தில் ஒன்று மற்றொன்றுக்குக் காரணமாயிருக்கிறது என்று விவாதிக்கப்படலாம். ஆனால் காரணத்துவம் என்பதே அடிப்படையற்றதாதலால், ஒரு பொருள் மற்றொன்றுக்குக் காரணமாக இருந்தால் இயலாது. ஆதி அந்தமுள்ள பொருள் மாறுதலுள்ளது. ஆகவே நிலையற்றதும் உண்மையற்றதுமாகும். ஏனெனில் மாறுதல் என்றால் ஆதியிலோ அந்தத்திலோ இல்லாதது என்று அர்த்தம்.

ஜாக்கிரத் நிலையின் பொருள்கள் சுவப்னத்தில் வேலை செய்யாததால் அவை உண்மையில்லாதவை. சுவப்னப் பொருள்கள் ஜாக்கிரத நிலையில் வேலை செய்யாததால் அவை உண்மையற்றவை. ஆகவே ஒவ்வொரு பொருளும் உண்மையற்றதே. ஜாக்கிரத நிலையில் வயிறு நிரம்ப உண்டவன் கனவு நிலையில் பசியால் வாட்டப்படுகிறான், கனவில் உண்டவன் விழிப்பில் பசியால் வாடுகிறான். பொருள்கள் அவ்வவற்றின் அதிகார எல்லையில் மட்டுமே உண்மையாயிருக்கின்றன. எப்போதும் உண்மையல்ல.

எப்போதும் உண்மையல்லாதது பொய்யே, ஏனெனில் உண்மை நித்தியமானது.

ஒரு பொருளைப் பார்ப்பது என்பது பொய், ஏனெனில் பொருள்கள் மனத்தின் சிருஷ்டிகளே. ஒரு பொருளுக்கு ஒரு குறிப்பிட்ட உருவம் இருக்கிறது என்றால் மனது அதற்கு அப்படி உள்ளதாக நம்புகிறதே காரணம். உண்மையில், கனவு நிலை, விழிப்பு நிலை ஆகிய இரு நிலைகளின் பொருள்களும் உண்மையற்றவையே. ஒரு பொருள் அப்பொருளை உணரும் குறிப்பிட்ட மனநிலை உள்ளவரையில் தான் இருக்கிறது. முழுதும் வேறான மனோநிலை உண்டாகும்போது, பொருள்களும் மாறுகின்றன. ஆகவே எல்லாப் பொருள்களும் பொய்யே.

கனவு விழிப்பு ஆகிய இரு நிலைகளிலும், உள்ளுணர்வுகள் உண்மையற்றவையாயும் வெளி உணர்வால் புலனாகும் பொருள்கள் உண்மைபோலும் தோன்றுகின்றன.

விழிப்பு நிலையில் உண்மையென்றும் உண்மையல்லாதது என்றும் நாம் வேறுபாடு பாராட்டினால் கனவிலும் நாம் அதையே செய்கிறோம். கனவிலும்கூட உள்ளுணர்வுப் பொருள்கள் உண்மையற்றவை. கனவு விழிப்பு நிலையைப் போலவே உண்மையானது. ஆனால் கனவு உண்மையற்றது என்று நிரூபிக்கப்படுவதால் விழிப்பும் கூட உண்மையற்றதே. விழிப்பு நிலையை ஆதாரமாகக் கொண்டு பார்த்தால்தான் கனவு உண்மையற்றதாகிறது. அதேபோல்தான் விழிப்பும் கனவு காண்பவனுக்கு மெய்ஞானத்தை ஆதாரமாகக் கொண்டு விழிப்பும் கனவைப் போன்றே உண்மையற்றது.

## 11. கற்பனையின் உண்மையின்மை

சுவப்னங்களிலும் மூர்ச்சை நிலைகளிலும் மனதின் விளையாட்டு மூலம் அருகாமை வெகு தொலைவாகவும் தொலைவு அருகாமையாயும் தோன்றுகிறது. மனதின் சக்தியினால் பெரிய காலசக்கரம் ஒரு விநாடியாயும் ஒரு வினாடி பெரிய காலசக்கரமாகவும் (யுகமாகவும்) தோன்றுகிறது. வாஸ்தவத்தில் அது நமது உள்ளத்தில் உதித்த நீண்ட கனவே (தீர்க்க சுவப்னம்). இவ்வுலகம் நீண்ட கனவைத் தவிர வேறில்லை. மனது விளையாட்டாய் ஒரு பிரமையை உண்டாக்குகிறது. மனதின் லீலை மூலம் சுவப்ன உலகம் உண்மைபோல் தோற்றமளிக்கிறது. பின்வரும் கதை இவ்விஷயத்தை விளக்கும்.

இலவணன் உத்தர பாண்டவ தேசத்தின் அரசன். ஒருசமயம் அவன் தன் சிங்காதனத்தில் வீற்றிருந்தான். அவனுடைய மந்திரிகள் உத்தியோகஸ்தர்கள் அனைவரும் கூடியிருந்தார்கள். இச்சமயம் ஒரு மந்திரவாதி அல்லது சித்தன் தோன்றினான். அவன் அரசனுக்கு அடிபணிந்து "மகாப்பிரபு! எனது அற்புத வித்தையைக் கண்டருளும் என்றான். அச் சித்தன் தன்னுடைய மயிலிறகுக்கொத்தை அசைத்தான். அரசனுக்குப் பின்வரும் அனுபவங்கள் ஏற்பட்டன. சிந்து தேசத்தரசனின் தூதன் ஒருவன் இந்திரனுடையது போன்ற ஒரு குதிரையுடன் சபையில் புகுந்து "மகாப்பிரபு! என் எஜமானர் இந்தக் குதிரையைத் தங்களுக்குப் பரிசாக அனுப்பியுள்ளார்" என்றான். சித்தன் அரசனை அக்குதிரைமீதேறி மனம்போல் சவாரி செய்யும்படி வேண்டினான். அரசன் அக்குதிரையை உற்றுப்பார்த்துக் கொண்டே இரண்டு மணி நேரம் சமாதி நிலையையடைந்தான். பிறகு விரைத்து நின்று சரீரம் தளர்ந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு அரசனது சரீரம் தரையில் விழுந்தது. அரச சபையினர் சரீரத்தை நிமிர்த்தினர். கொஞ்சம் கொஞ்சமாய் அரசனுக்குப்

பிரக்ஞை வந்தது. மந்திரிகளும் அவையினரும் "மகராஜாவுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். அரசன் கூறினதாவது; சித்தன் தன்னுடைய மயிலிறகுக் கொத்தை வீசினான். என் எதிரில் ஒரு குதிரை தெரிந்தது. நான் அதன் மீது அமர்ந்து கடுமையான வெய்யிலில் ஒரு பாலைவனத்தில் சென்றேன். என்நாவு வறண்டது. மிகவும் களைப்படைந்தேன். நான் குதிரை மீது சவாரிபோகும்போது ஒரு கொடி என் கழுத்தில் சுற்றிக்கொள்ளவும் குதிரை ஓடிவிட்டது. இரவு முழுவதும் கழுத்தில் சுற்றிக்கொண்ட கொடியுடன் இங்குமங்கும் காற்றில் ஆடிக்கொண்டிருந்தேன். மிகுந்த குளிரினால் நடுங்கிக்கொண்டிருந்தேன்.

"பொழுது புலர்ந்து சூரியனைக் கண்டேன். கழுத்தைச் சுற்றியிருந்த கொடியை அறுத்தெறிந்தேன். அப்போது ஒரு இழிகுலப் பெண் தன் கைகளில் உணவையும் நீரையும் கொண்டுபோவதைக் கண்டேன். எனக்கு மிகவும் பசியாயிருந்ததனால் அவளை எனக்குச் சிறிது உணவை அளிக்கும்படி கேட்டுக்கொண்டேன். அவள் எனக்கு ஒன்றும் அளிக்கவில்லை. நான் அவள்பின் வெகுநேரம் வரையில் சென்றேன். அப்போது அவள் என்னைத் திரும்பிப்பார்த்து; "நான் பிறப்பில் சண்டாளி, நீ என்னை என் சொந்த ஊரில் என் பெற்றோர் முன்னிலையில் மணம் செய்துகொண்டு அங்கேயே வசிப்பதாக வாக்குக் கொடுப்பாயானால் இந்த நிமிஷமே என் கையிலுள்ளதைக் கொடுப்பேன்" என்றாள். நான் அவளை மணக்கச் சம்மதித்தேன். உடனே அவள் பாதி உணவை எனக்குக் கொடுத்தாள். நான் அவ்வுணவை உண்டு நாவல் பழரஸத்தைப் பருகினேன்.

" பிறகு அவள் என்னைத் தன் தந்தையிடமழைத்துச் சென்று மணம் செய்துகொள்ள அனுமதி கேட்டாள். அவன் சம்மதித்தான். பிறகு அவள் என்னைத் தன் இருப்பிடத்துக்கு இட்டுச் சென்றாள். அப்பெண்ணின் தகப்பன் குரங்குகள், பசுக்கள், பன்றிகள் ஆகியவற்றை இறைச்சிக்காகக் கொன்று

நரம்புக்கயிறுகளில் அவற்றை உலர்த்தினான். ஒரு சிறு பந்தல் போடப்பட்டது. நான் ஒரு பெரிய வாழை இலைமீது அமர்ந்தேன். கோணல் பார்வையுள்ள என் மாமியார் தன் இரத்தக்கண்களால் என்னை நோக்கி "இவன் தான் நமது மருமகனாகப் போகிறவனா?" என்று கேட்டாள்.

"கல்யாணம் விமரிசையாகத் தொடங்கியது. என் மாமனார் எனக்கு உடைகளையும் மற்றும் வஸ்துக்களையும் பரிசளித்தார். கள்ளும் மாமிசமும் தாராளமாக வழங்கப்பட்டன. மாமிசமுண்ணும் சண்டாளர்கள் தங்கள் தப்பட்டைகளை முழக்கினார்கள். அப்பெண் எனக்கு மணம் செய்து கொடுக்கப்பட்டாள். எனக்கு "புஷ்டன்" என்று பெயர் அளிக்கப்பட்டது. கல்யாண மகோற்சவம் ஏழு நாட்கள் நடந்தது. இம் மனைவியால் முதலில் ஒரு மகள் பிறந்தாள். மேலும் மூன்று ஆண்டுகளில் என் மனைவி ஒரு கருத்த மகனைப் பெற்றாள். மறுபடியும் ஒரு மகளைப் பெற்றாள். நான் பெருங்குடும்பியான கிழச் சண்டாளனாக வெகு காலம் வாழ்ந்திருந்தேன். குழந்தைகளால் துன்பம்தான். காமவேகத்தால் மனிதசமூகத்துக்கு விளையும் துயரம் குழந்தை உருவத்தைக் கொள்கின்றன. குடும்பக் கவலைகளாலும் கஷ்டங்களாலும் எனது சரீரம் முதிர்ந்து எலும்பும் தோலுமாயிற்று. பயங்கரமான வனத்தில் நான் வெப்பத்தாலும் குளிரினாலும் நலிந்தேன். விறகுச் சுமைகளைச் சுமந்தேன். குளிர்காற்றில் துன்புற்றேன். நான் வேர்களை உண்ண வேண்டி வந்தது. அறுபது வயது கல்பகோடி காலம்போல் கழிந்தது. ஒரு கடுமையான பஞ்சம் வந்தது. பலர் பட்டினியால் மாண்டனர். எனது உறவினரில் சிலர் அவ்விடத்தைவிட்டுச்சென்றார்கள்.

"நானும் என் மனைவியும் அந்நாட்டை விட்டு நீங்கி கடுமையான வெய்யிலில் வழி நடந்தோம். நான் இரு குழந்தைகளைத் தோள்கள் மீதும் மூன்றாவதைத் தலைமீதும் தூக்கிக் கொண்டேன். வெகு தொலைவு நடந்து ஒரு காட்டின் எல்லையை அடைந்தேன். ஒரு பெரிய பனை

மரத்தின் கீழ் சிறிது இளைப்பாறினோம். உக்கிரமான வெய்யிலில் நீண்ட நேரம் பிரயாணம் செய்ததால் என் மனைவி இறந்தாள். எனது இளைய மகன் பிரகேசன் எழுந்து என் முன் நின்று கண்ணீர் சொரிந்து கொண்டு "அப்பா, எனக்குப் பசிக்கிறது. உடனே எனக்குக் கொஞ்சம் மாமிசமும் தண்ணீரும் கொடு. இல்லாவிட்டால் நான் இறப்பேன்" என்றான். அவன் கண்ணும் கண்ணீருமாய் தான் பசியால் சாவதாகத் திரும்பத் திரும்பக் கூறினான். தந்தைக்குள்ள அன்பினால் நான் வருந்தினேன். மனது மிகவும் உருகியது. அத்துன்பத்தை என்னால் சகிக்க முடியவில்லை. அப்போது நான் தீயில் விழுந்து உயிரை மாய்த்துக்கொள்ளத் தீர்மானித்தேன். கட்டைகளைப் பொறுக்கிச் சேர்த்து நெருப்பு மூட்டினேன். அதில் குதிப்பதற்கு எழுந்து நின்றேன்; அப்போது சிங்காதனத்தி லிருந்து விழுந்து விழித்துக் கொண்டேன். நான் இப்போது மறுபடி மன்னனாகக் காண்கிறேன். சண்டாளனல்ல.

இக்கதை மனத்துக்குள்ள வெவ்வேறு இயல்புள்ள செயல்களை எடுத்துக்காட்டுகிறது. மூர்ச்சை நிலையின் அனுபவங்கள், ஜாக்கிரத நிலையின் அனுபவங்கள், கனவின் அனுபவங்கள், ஆகிய யாவும் ஒத்திருக்கின்றன. பிரக்ஞையின் எல்லா நிலைகளிலும் ஸம்ஸ்காரங்கள் சமமாகப் பதிந்திருக்கின்றன. மனது சுறுசுறுப்பாக வேலை செய்யும் போது அதன் எல்லா நிலைகளிலும் சம்சார துக்கம் சமமாகவே உணரப்படுகிறது. நாம் காண்பதெல்லாம் மனதின் தோற்றமே. அது முற்றிலும் பிரமை. காலமும் மனதின் ஒரு போக்கு. நூற்றாண்டுகள் ஐந்து நிமிஷங்களாகவும், ஐந்து நிமிஷங்கள் நூற்றாண்டுகளாகவும் கழிகின்றன. இரண்டு மணி நேரத்தில், இலவண மன்னன் அறுபது வருஷத்தைய வெவ்வேறு வகை வாழ்க்கையை அனுபவித்துவிட்டான்.

அரசனான அவனது வாழ்க்கை உண்மையா அல்லது சண்டாளனான வாழ்க்கை உண்மையா என்று எவராலும்

கூறமுடியாது. இது கனவா அது நனவா என்று நாம் கூறமுடியாது. அரசன் சண்டாள வாழ்க்கையைப் பற்றிக் கனவு கண்டான் என்பதற்குப் பதில், உண்மையான சண்டாளன் ஒருவன் தான் இலவண மன்னன் என்று கனவு கண்டதாக நாம் கருதக்கூடும். பூமியில் நமது வாழ்க்கை முழுவதும் இதுபோன்ற கற்பனையின் விளையாட்டே. நமது உணர்வு நிலைகளை பொருந்தச் செய்ய நாம் முயலும்போது அவை ஒன்றுக்கொன்று முரண்பாடாகக் காண்கின்றன. நாம் கனவு காண்கிறோமா அல்லது விழித்திருக்கிறோமா என்று நம்மால் கூற இயலாது. நமக்குக் கற்பனையில் ஒவ்வொரு நிலையும் உண்மையாகத் தோன்றுகிறது. நாம் வேறொரு உலகத்தில் படுக்கையில் உறங்குகையில் இவ்வுலகில் ஆகாயக் கோட்டைகள் அமைத்துக் கொண்டிருக்கலாம். நாம் உயிர் வாழும் உலகத்தின் உண்மைக்கு எதையும் பிரமாணமாகக் கொடுத்தல் இயலாது. நாம் யாவரும் இப்போது பொதுவான ஒரு உலகத்தையே அனுபவிக்கிறோம் என்றால் அகஸ்மாத்தானது போல் நம்மில் பிரக்ஞையின் நிலைகள் ஒன்றுபட்டுள்ளன என்பதே காரணம். அதோடு நாம் யாவரும் ஒரே மாதிரியாக உலகத்தைக் காண்கிறோம் என்பது நிச்சயமில்லை. மனிதனுக்கு மனிதன் உலகம் மாறுகிறது. ஒரே மனிதனுக்கு மனதின் வெவ்வேறு நிலைகளில் உலகம் மாறுகிறது. இதுவே கனவு விழிப்பு நிலை.

நாம் மனதின் தற்போதைய நிலையோடு பெரிதும் ஈடுபட்டிருப்பதாலும் கற்பனையின் விடாப்பிடியான நிலையில் பற்றிக் கொண்டிருப்பதாலும் தற்போது உள்ளதைத் தவிர வேறெதுவும் உண்மையாகத் தோன்றுவதில்லை. நாம் சென்றதை மறந்து வரப்போவதைப் புறக்கணிக்கிறோம். இப்போது நாம் நேற்றைய கனவு பொய்யென்று எண்ணுகிறோம். கனவு நிலையில் விழிப்பு நிலைக்கும் இதே திட நிச்சயத்தைப் பிரயோகம் செய்கிறோம். நாம் கற்பனையின் கேவல அடிமைகளல்

லோமோ? நமது தனிப்பட்ட வாழ்க்கை இவ்வாறு பொய்யென்றும் பிரமையான கற்பனையின் போக்குகளின் இழிந்த சிருஷ்டியென்றும் நிரூபிக்கப்படுகிறது.

## 12. ஜாக்கிரத நிலையும் கனவென்பது ஏன்?

ஜாக்கிரத அவஸ்தை என்பது விழிப்பு உணர்வு (பிரக்ஞை) நீ பார்க்கிறாய், உணர்கிறாய், யோசிக்கிறாய், அறிகிறாய், வெளி இந்திரியப் பிரபஞ்சத்தைப் பற்றிப் பிரக்ஞை உனக்கு இருக்கிறது. கேட்கும் உறுப்பும் பார்க்கும் உறுப்பும் வெகு எச்சரிப்பாய் இருக்கின்றன. காதைவிடப் பார்க்கும் உறுப்பு அதிக சுறுசுறுப்பாய் இருக்கிறது. அது பழக்கத்தின் வேகத்தினால் ரூபங்களின் மீதும் பற்பல அழகிய வஸ்துக்களின் மீதும் தலைக்குத்தலாகப்பாய்கிறது. ஜாக்கிரத நிலையை அபிமானிப்பவன் விஸ்வன் எனப்படுகிறான். அவன் தன்னை ஸ்தூல சரீரத்தோடு ஒன்றுபடுத்திக் கொள்கிறான். விஸ்வன் வியஷ்டி (தனித்த) அபிமானி. விராட் ஸமஷ்டி (சேர்க்கை) அபிமானி. விஸ்வன்· க்ஷீத்ர பிரம்மாண்டம், விராட் பிரம்மாண்டம், வியஷ்டி தனித்தது. ஸமஷ்டியாவும் சேர்ந்தது. ஒரு தனி தீக்குச்சி வியஷ்டியாகும். ஒரு தீப்பெட்டி ஸமஷ்டியாம். ஒரு தனி வீடு வியஷ்டி. ஒரு கிராமம் ஸமஷ்டி. ஒரு தனிமாமரம் வியஷ்டி. ஒரு மாந்தோப்பு ஸமஷ்டி. ஜாக்கிரத நிலையில் காதும் கண்ணும் இந்திரிய அறிவுக்கு மார்க்கங்கள்.

மனது விழிப்பு உணர்வின் ஸம்ஸ்காரங்களையும் அனுபவங்களையும் கொண்டு கனவு உலகத்தைப் படைக்கிறது.

ஸ்தூல உணர்வின் அனுபவங்கள் சில மாறுதல்களுடன் மீண்டும் உற்பத்தியாவதே கனவு. விழிப்பு உணர்வினால் உண்டாக்கப்பட்ட வஸ்துக்களைக் கொண்டு மனது கனவு சிருஷ்டிகளைப் பின்னுகிறது. கனவில் கர்த்தாவும் பொருளும் ஒன்றே. இந்நிலையில் அறிபவனும் அறியும்

பொருளும் ஒன்றே. கனவு அவஸ்தையை அபிமானிப்பவன் தேஜஸன். தேஜஸன் வியஷ்டி அபிமானி, முதலில் உண்டான ஹிரண்ய கர்ப்பன் சமஷ்டி அபிமானி.

ஜாக்கிரத நிலையில் அபிஜ்ஞம் அல்லது அபிஜ்ஞஞானம் என்றும் பிரதிபிஜ்ஞம் அல்லது பிரதிபிஜ்ஞஞானம் என்றும் இருவகை ஞானங்கள் உள்ளன. அபிஜ்ஞம் என்பது புலனால் அறியும்ஞானம். நீ ஒரு மரத்தைக் காண்கிறாய். நீ 'இது ஒரு மரம்' என்று அறிகிறாய். இது அபிஜ்ஞம். பிரதி பிஜ்ஞம் என்பது நினைவு கூறுவது, ஈண்டு முன்னம் பார்க்கப்பட்ட ஒருபொருள் வேறுஒரு பொருளிலோ அல்லது இடத்திலோ நினைவில் வருவது. உதாரணம், முன்பு பார்க்கப்பட்ட ஒரு கருப்புப் பசுவின் பொது லட்சணம் மறுபடி ஒரு வெள்ளைப் பசுவில் நினைவுக்கு வருவது, அல்லது 1922-இல் நான் வாரணாசியில் பார்த்த திரு ராதாகிருஷ்ணன் 1932இல் கல்கத்தாவில் தோன்றும்போது நினைவுக்கு வருவது. முன்பு பார்க்கப்பட்ட அதே பொருள் நமது புலன்களின் முன்னிலையில் மறுபடி தோற்றமளிக்கும்போது நினைவுக்குவரும் விவகாரங்கள் இவை. பொருள், காலம் தேசம் ஆகியவற்றைப்பற்றி மனதில் ஒரு சம்ஸ்காரம் இருக்கிறது. நான் திரு. ராதாகிருஷ்ணனைக் கல்கத்தாவில் தெரிந்துகொண்ட போது, அவரை நான் முதலில் பார்த்த வாரணாசியையும் 1922ம் ஆண்டு என்னும் காலத்தையும் விட்டுவிட்டு தற்போதைய இடமான கல்கத்தாவையும் தற்போதைய காலமான 1932ஐயுமே கருத்தில் கொண்டேன். இது பிரதிபிஜ்ஞத்தால் உண்டாகும் அறிவு. அபிஜ்ஞத்தில் அந்தக் காரண ஸம்ஸ்காரமில்லை. வஸ்துவோடு புலனின் சேர்க்கையால் உண்டாகும் அறிவு மாத்திரமே.

உனக்கு 60 வயது ஆகும்போது உனது கல்லூரி வாழ்வைப்பற்றிச் சென்ற காலத்தைச் சிந்தித்தால், அது யாவும் உனக்குக் கனவே. இல்லையா நண்பர்களே? எதிர்காலமும்

இப்படியேதான் ஆகும். தற்காலம்தான் இருப்பு செயல்களைத் திரும்பத் திரும்பச் செய்வதன் மூலமும் திடமான வாசனைகள் மூலமும் பலமான ஸம்ஸ்காரங்களின் வேகம் காரணமாக இது அவிவேகிக்குத்தான் உண்மையாகத் தோன்றும். எதிர்காலம் கனவே, திடமான நிகழ்காலமும் கனவே. நீ ஒரு மாதம் தனியாக அலஹாபாத்தில் வசிக்கும்போது, நீ சென்னை, உன் விவகாரங்கள், குடும்பம், குழந்தைகள் முதலியவற்றைப் பற்றி முழுதும் மறந்துவிடுகிறாய். உனக்கு அலஹாபாத் ஸம்ஸ்காரங்கள் மட்டும் இருக்கின்றன. அச்சமயத்தில் சென்னை உன் மனத்தில் இல்லை. உன் மனத்தில் அலஹாபாத் தான் இருக்கிறது. நீ மறுபடி சென்னைக்குத் திரும்பும்போது, சில காலத்துக்குப் பிறகு அலஹாபாத் விஷயங்கள் முழுதும் மனத்தைவிட்டு மறைகின்றன. நீ அலஹாபாத்திலிருக்கும்போது, சென்னை உனக்கு ஒரு கனவாகவும், சென்னையிலிருக்கும்போது அலஹாபாத் ஒரு கனவாகவும் உள்ளன. உலகம் மனதின் ஒரு ஸம்ஸ்காரம் மாத்திரமே. ஆசாபாசங்கள் நிறைந்த ஸ்தூல மனதைப் படைத்த ஒரு லோகாயாத மனிதனுக்கு உலகம் திடமான உண்மையே.

சங்கராசார்ய சுவாமியின் பரமகுருவாகிய கௌட பாதரின் கொள்கைப்படி ஜாக்கிரத அவஸ்தையும் யாதொரு வேற்றுமையின்றி கனவேதான். சில மகான்கள் விழிப்பு நிலையை நீண்ட கனவு (தீர்க்க கனவு) என்கிறார்கள். "ஜாக்கிரத நிலையில் நாம் விழித்தவுடன் அதே பொருள்கள் அதே இடத்தில் இருக்கக் காண்கிறோம் (தேச காலம்). ஆனால் கனவுகளிலோ அதே பொருள்களை மறுபடி பார்ப்பதில்லை. நாம் தினமும் வெவ்வேறு பொருளைக் காண்கிறோம். இதற்கு என்ன காரணம் நீ கூறக் கூடும்?" என்று ஆக்ஷேபணை கிளம்பலாம்.

கனவுகளில் கூட சிலசமயங்களில் அதே பொருள் களைத் திரும்பத்திரும்ப வெவ்வேறு சந்தர்ப்பங்களில் நாம் காண்கிறோம்.

ஒவ்வொரு நிமிஷமும் உலகம் மாறிக்கொண்டிருக்கிறது. நீ அதே உலகத்தை ஒவ்வொரு நாளும் காண்பதில்லை. வாலிபர்கள் வயதானவர்களாகிறார்கள். ஒவ்வொரு விநாடியும் சரீரத்தின் அணுக்கள் மாறிக் கொண்டிருக்கின்றன. மனதும் ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டிருக்கிறது. மரங்களும் எல்லாப் பொருள்களும் இடைவிடாமல் மாறிக் கொண்டிருக்கின்றன. காலை 6 மணிக்கு நீ பார்க்கும் கங்கை நீர் 6-5க்கு நீ பார்க்கும் போது அதுவேயல்ல. ஒரு லாந்தரில் திரி எரியும்போது நீ வெளிச்சத்தைக் காண்கிறாய். ஆனால் திரி எப்போதும் மாறிக்கொண்டேயிருக்கிறது. சூரிய சந்திர நட்சத்திரங்கள் முதலியவற்றிலும் இடைவிடாத மாறுதல்கள் இருக்கின்றன. ஸ்தூல புத்தியுடையவர்களுக்குத்தான் உலகம் நிலையாக இருக்கிறது. சூஷ்ம புத்தியுடைய மனிதன் ஒவ்வொரு நாளும் அதே உலகத்தைப் பார்ப்பதில்லை. அவன் ஒவ்வொரு விநாடியும் மாறுதல்களைக் காண்கிறான் தினமும் ஒரு புது உலகத்தைக் காண்கிறான். ஆகவே விழிப்புப் பிரக்ஞையும் கனவே தான். நீ விழித்தவுடன் கனவு பொய்யாகி விடுவதுபோல், நீ விவேகத்தையும் ஞானத்தையும் அடையும்போது ஜாக்கிரதப் பிரக்ஞையும் கனவாகி விடுகிறது. இடைவிடாமல் சுழன்று மாறிக் கொண்டிருக்கிற மின்னணுக்களாலான பிண்டமே உலகம் என்று உனக்கு விஞ்ஞான சாஸ்திரம் கூறுகிறது.

"ஜாக்கிரத அவஸ்தையில் சம்பவங்கள், ஆட்கள், இடங்கள் முதலியவற்றை நாம் நினைவு கூறுகிறோம். கனவில் நாம் நினைவு கொள்ளவில்லை? இதற்கு என்ன விளக்கம் நீ கூறமுடியும்?" என்று மறுபடி ஆக்ஷேபணை எழலாம்.

கனவு அல்லது கனவு நிலையில் ரஜோகுணப்பிரதானம் உள்ளது. ரஜோகுணம் ஆதிக்கமடைந்திருக்கிறது. ஜாக்கிரத நிலையில் சத்வகுணம் ஆதிக்கமடைந்திருக்கிறது. அதுதான் கனவுகளில் உனக்கு ஞாபகம் இல்லாமைக்குக் காரணம்.

நீ விழித்தவுடன் கனவுகள் பொய்யாகிவிடுகின்றன. நீ கனவு காணும் வரையில் ஒவ்வொரு பொருளும் உனக்கு உண்மையாயிருக்கிறது. இவ்வுலகம், விழிப்பு உணர்வு, நீ ஞானம் எய்தியவுடன் கனவாகி விடுகிறது. ஆகவே தான் ஜாக்கிரதமும் கனவு என்று பெயர் கூறப்படுகிறது. இது முரண்பாடுபோல் தோன்றுகிறது. ஆனால் அது அவ்வாறு அல்ல, நன்றாக யோசனை செய்.

"நண்டமுறையில் மருத்துவம்" என்னும் டில்லி பத்திரிக்கையின் ஆசிரியரான டாக்டர் ராம நாராயணன் என்பவர் ஒரு சிறப்பான சாதன முறையால் கனவுப் பிரக்ஞையை ஆராய்ந்துள்ளார். அவருடைய 'கனவுப் பிரச்சனை' (Dream problem) மலர் ஒன்று இரண்டு ஆகியவற்றைப் படித்துப்பார். அவை ருசிகரமாயும் பயன்படத்தக்க விஷயங்கள் நிறைந்தும் இருக்கின்றன. பின்வருவதைத் தெரிவிக்கும் கனவுகளில் வஸ்துக்கள் ஸம்ஸ்காரங்களின் களஞ்சியமாகிய காரண சரீரம் அல்லது பீஜ சரீரத்திலிருந்து வருகின்றன.

கௌடபாதரின் காரிகையுடன் கூடிய மாண்டூக்ய உபநிஷத்தை ஸம்ஸ்கிருதத்திலோ அல்லது' திரு எம்திரிவேதியின் ஆங்கில மொழிபெயர்ப்புடனோ (தியஸாபிகல் வெளியீடு) ஊன்றிப் படிக்கும்படி வாசகர்களை உருக்கமாகக் கேட்டுக் கொள்ளப்படுகிறது. அதில் கனவுப் பிரச்சனை பொருத்தமான வாதங்களுடன் விவரமாக எடுத்துரைக்கப்படுகிறது.

"நான் விஷயத்தைக் கவனமாக ஆலோசிக்குமிடத்து' நான் விழித்திருக்கிறேனா அல்லது கனவு காண்கிறேனா என்று உறுதியாக தீர்மானிக்கக்கூடிய யாதொரு குணவிசேஷத்தையும் நான் காண்கிலேன். கனவின் தோற்றங்களும் என் விழிப்பு நிலையின் அனுபவங்களும் வெகுவாக ஒத்திருப்பதால் நான் முழுதும் குழப்பமடைந்திருக்கிறேன். இந்த நிமிஷத்தில் நான் கனவு

கண்டுகொண்டிருக்கவில்லையென்று நான் உண்மையாக உணரவில்லை" (டெஸ்கார்டிஸ்; தியானங்கள், பிஜ).

ஒரே கனவு ஒவ்வொரு இரவும் நமக்கு வருவதனால் நாள்தோறும் நாம் காணும் பொருள்களில் நாம் ஈடுபடுவதைப்போல் அதிலும் ஈடுபடுவோம் என்று பாஸ்கல் சரியாகக் கூறுகிறார். அவருடைய சொற்களிலேயே சொல்லுமிடத்து "ஒரு சிற்பிக்கு ஒவ்வொரு இரவு பன்னிரண்டு மணி நேரமும் மன்னனாக கனவு காண்பது உறுதியானால் ஒரு அரசன் ஒவ்வொரு இரவும் பன்னிரண்டு மணி நேரம்தான் சிற்பியென்று கனவு காணுவதால் எவ்வளவு சந்தோஷமடைவானோ அதே அளவு சந்தோஷத்தை அவன் அடைவான் என்று நான் நம்புகிறேன்."

கனவில் பார்ப்பவனும் பார்க்கப்படும் பொருளும் ஒன்றே. கனவில் தேனி, பூ, மலை, குதிரைகள், நதிகள் முதலியவற்றை மனது படைக்கிறது. கனவுப் பொருள்கள் மனத்திலினின்று சுதந்திரமுடையவையல்ல. மனதைவிட்டு வேறாக அவற்றிற்குத் தனித்த இருப்பு கிடையாது. பால் கறக்கும் வரையில் பால்காரன் இருப்பதுபோல் கனவு இருக்கும் வரையில், கனவு சிருஷ்டிகளும் இருக்கின்றன. (மனிதன் கனவு காணும்போது கனவுமுற்றிலும் உண்மையாக இருக்கிறது). ஜாக்கிரத அவஸ்தையிலோ வஸ்துக்கள் மனதையன்றி சுதந்திரமான இருப்பு உள்ளவை. விழிப்பு நிலையின் வஸ்துக்கள் நம் யாவருக்கும் பொதுவாயுள்ளன; கனவுவஸ்துக்கள் கனவு என்பவனுக்கு உரிமை.

ஜாகோப் என்பவர் கௌடபாதரின் வாதங்களைப் பின்வருமாறு தர்க்கரீதியான உருவத்தில் அளிக்கிறார். விழிப்பு நிலையில் பார்க்கப்படும் பொருள்கள் உண்மையல்ல: இது பிரதிக்ஞை; ஏனென்றால் அவை பார்க்கப்படுகின்றன. இது யுக்தி (ஹேது); கனவில்

பார்க்கப்படும் பொருள்களைப் போலவே, இது உதாரணம் (திருஷ்டாந்தம்); கனவில் காணும் வஸ்துக்கள் உண்மையல்லாதது போலவே, பார்க்கப்படும் குணம் இதேபோல் விழிப்பு நிலையில் காணும் வஸ்துக்களுக்குச் சொந்தம்; இது யுக்தியைப் பிரயோகித்தல் (ஹேதுபன்யாயம்) ஆகவே விழிப்பு நிலையில் காணும் பொருள்களும் உண்மையல்ல இதுவே முடிவு.

கௌடபாதர் அனுபவ உலகத்தின் உண்மையற்ற தன்மையை (1) கனவு நிலையோடு அதன் ஒற்றுமை 2) அதன் தோற்றம் அல்லது வஸ்துத்தன்மை 3) அதை ஏற்பாடு செய்யும் விவகாரங்கள் விளங்காமை 4) எல்லாக் காலத்தும் அதன் நிலையாமை ஆகியவற்றால் உறுதிப்படுத்துகிறார்.

## 13. விழிப்பு அனுபவம் விவகாரிக உண்மையுள்ளது

### I

பூரண நிலையிலிருந்து நோக்கும்போது விழிப்பு நிலை கனவு நிலையைப் போன்றதே ஆனால் அதற்கு நடைமுறையில் உண்மை (வியவகாரிக சத்தா) உளது. கனவு பிரதி பாஸிகசத்தா அல்லது போலி உண்மை, துரியம் அல்லது பிரம்மம் பாரமார்த்திக சத்தா அல்லது பூரண உண்மை, விழிப்பு கனவைவிட அதிக உண்மையானது. துரிய நிலை விழிப்பை விட அதிக உண்மையானது. துரியத்தின் திருஷ்டி கோணத்தில் நோக்குமிடத்து விழிப்பு கனவு இரண்டும் பொய்யானவை. விழிப்பை மட்டும் எடுத்துக் கொண்டால் கனவு அனுபவத்துடன் ஒப்பிட்டால் கனவைக் காட்டிலும் அதிக உண்ணையானது ஓரளவுக்கு விழிப்புக்குத் துரியம் எப்படியோ அவ்வாறே விழிப்பு கனவுக்காம். கனவுக்குப் பின்னணியில் விழிப்பு உண்மை, விழிப்புக்குப் பின்னணியில் துரியம் உண்மை. கனவு காண்பவனுக்குக் கனவு கனவல்ல. விழித்திருப்

பவனுக்குத்தான் கனவு கனவாகத் தெரிகிறது. இதே போல், இன்னும் விழிப்பு நிலையிலே இருப்பவனுக்கு விழிப்பு உண்மையாக தோன்றுகிறது. துரிய நிலையிலிருப்பவனுக்குத்தான் விழிப்பு உண்மையற்றதாயிருக்கிறது. சுருக்கமான சாதாரண கனவுடன் வேற்றுமைப்படுத்திப் பார்க்கும் போது, விழிப்பானது தீர்க்க கனவு அதாவது நீண்ட கனவாகும்.

## II

அறியாமை காரணமாக விழிப்பில் விராட் சொரூபம் நேராக உணரப்படாவிட்டாலும், விழிப்பு விராட் பிரக்ஞையின் ஒரு பகுதியே. விழிப்பு விஸ்வனுக்கும் விராட்டுக்கும் இடையில் இணைக்கும் வளையம். மனிதன் விழித்திருக்கும் போதும் அவனது உணர்வு ஊக்கமாயிருக்கும் போதும் உலகத்தையும் உண்மையையும் சிந்திக்கிறான். கனவில் புத்தியும் இச்சா சக்தியும் அவித்யை காரணமாகத் திறமையற்றுப் போவதால் நிதானமான ஆலோசனை அசாத்தியமாகிறது. விஸ்வன் அல்லது ஜாக்கிரத நிலையிலுள்ள ஜீவன் புத்தியும் சுதந்தர இச்சா சக்தியையும் உடையதாயுள்ளது. தேஜஸன் அல்லது கனவு நிலையிலுள்ள ஜீவன் அப்படிப்பட்ட சுதந்திரமான ஆலோசிக்கும் சக்திகள் அற்றதாயிருக்கிறது. விழிப்பு அனுபவத்தின் கவடுகளின் பலவீன கனவு அனுபவம்; ஆனால் விழிப்பு அனுபவம் கனவு அனுபவத்தையும், அதன் பொருள்களையும் விட்டு வேறுபட்டது. விழிப்பு அனுபவத்தில் குறைந்தது கனவைவிட அதிகமாகவாவது ஒரு வகையான ஒழுங்கு அல்லது ஏற்பாடு உள்ளது. ஒவ்வொரு நாளும் அதே மனிதர்களும் பொருள்களும் விழிப்பு அனுபவத்தின் வஸ்துக்களாகின்றன. விழிப்பு நிலையில் முன் நாளைய அனுபவங்களின் நிச்சயமான நினைவும் இருப்பும் மனிதனது தொடர்ச்சியும் இருக்கின்றன. இந்த தொடர்ச்சிப் பிரக்ஞையும் ஒழுங்கும் ஒற்றுமையும் கனவில் காணப்படுவதில்லை கனவு நல்ல

ஒழுங்குள்ளதல்ல; விழிப்போ ஒத்திடுமிடத்து ஒழுங்கான அமைப்புடையது.

## III

தனிமனிதனின் அனுபவங்களில் உண்மைக்கு மூன்று படிகள் உண்டு. மூன்று முக்கிய படிகளாவன-கர்த்தாவினது, பொருளினது, பூரணமானது. கனவு அனுபவம் கர்த்தாவைச் சார்ந்ததே. விழிப்பு அனுபவம் வஸ்துவைப்பற்றியது. ஆத்ம ஞானத்தை அல்லது பிரம்மஞானத்தை அடைவது பாரமார்த்திக உண்மையின் அனுபவமே. விஷயமான உலகத்துடன் ஒப்பிடும் போது மனிதன் கர்த்தா. கர்த்தாவும் விஷயமும் சமமாக உண்மையுடையவை. ஆனால் பாரமார்த்திகத்தில் இரண்டும் இல்லையென்று ஆக்கப்படுகிறது. விஷயமான உலகம் விழிப்பு அனுபவத்துக்கு க்ஷேத்திரம். ஆகவே விழிப்பு விவகார உண்மையுடையது. ஆனால் கனவு விழிப்பைவிட உண்மை குறைந்தது. ஏனெனில் விழிப்பு உலகத்தின் வெளியுலகத்துடன் நேரான தொடர்பு கனவில் இல்லை. கனவிலும்கூட ஒரு வெளியுலகம் இருந்தபோதிலும் அதன் மதிப்பு விழிப்பில் உள்ள உலகத்தினுடையதைவிடக் குறைந்தது. கனவின் உருவமும் விழிப்பு உலகத்தின் உருவத்தோடு ஒத்துக்கொண்டாலும், சிறப்பில் கனவு உலகம் விழிப்பு உலகத்தைவிடத் தாழ்வானது. தேசம், காலம், இயக்கம், பொருள்கள் ஆகியவை கர்த்தா வஸ்து ஆகிய வேறுபாடுகளுடன் விழிப்பு, கனவு இரண்டுக்கும் பொதுவானவை. அவை அனுபவிக்கப்படும் சமயத்தில் அவை தோற்றுவிக்கும் உண்மைகூட ஒரே இயல்புடையது. ஆனால் அவற்றால் தோற்றுவிக்கப்படும் உண்மையின் அளவில் வேறுபாடு உளது. கனவைவிட விழிப்பில்தான் உண்மையின் உயர்ந்த வகுப்பில் இருப்பதாக ஜீவன் உணர்கிறான்.

## IV

கனவு எவ்வாறு மனதின் கற்பனையோ அதேபோல் விழிப்பும்கூட மனத்தின் லீலை மாத்திரமேயென்று விழிப்பின் உண்மையின்மையை நிரூபிப்பதற்கு வாதம் கொண்டு வரப்படுகிறது. ஆனால் கனவில் காணும் வஸ்துக்கள் கனவுக்கர்த்தாவின் கற்பனைகள் அல்ல; அக்கர்த்தாவே கனவில் தோற்றுவிக்கப்படும் கற்பனைப் பொருள்களில் ஒன்று. கனவு வஸ்துக்களைவிட கனவுக்கர்த்தா எவ்வித்திலும் அதிக உண்மையுள்ளதல்ல. அவை இரண்டும் சமமான உண்மையும் சமமான உண்மையின்மையுமுடையவை. கனவுக்கர்த்தாவும் கனவு விஷயமும் கனவில் கர்த்தாவையும் விஷயங்களையும் ஒன்றுபடுத்தும் விஸ்வனின் கனவின் கற்பனைகளே.இதேபோல், விழித்திருக்கும் மனிதன் அவனால் காணப்படும் பொருள்களுக்குக் காரணன் அல்ல. ஏனெனில் இவை இரண்டும் ஒரே ரக உண்மையைச் சேர்ந்தவை. அவற்றில் எதுவும் மற்றொன்றைவிட அதிக உண்மையானதல்ல. வஸ்துக்களுக்கு இயல்பான நற்குணங்களும் குறைபாடுகளும் விழிப்பு நிலையில் அனுபவிக்கப்படும் எல்லாக் கர்த்தாக்களிலும் பொருள்களிலும் உள்ளன. விழிப்பு நிலையின் கர்த்தாவும் பொருள்களும் இரண்டும் பிரபஞ்சத்தில் அடங்கிய பொருள்கள் யாவையும் ஒன்றுபடுத்தும் பிரம்மாண்டமான மனத்தின் பயன்கள். தனி மனத்தைவிட பிரம்மாண்ட மனது அதிக உண்மையுடையது. இவ்வாறு விவகார ரீதியில் விழிப்பு நிலை கனவு நிலையைவிட அதிக உண்மையானது.

## V

விஸ்வனுக்கும் விராட்டுக்கும் என்ன சம்மந்தமோ அதே முறையில் தேஜஸனுக்கும் ஹிரண்ய கர்ப்பனுக்கும் சம்மந்தம் இருக்கிறது என்று கூறமுடியாது. சஞ்சலம், தெளிவின்மை, தீர்மான சக்தியின்மை, புத்திமயக்கம் ஆகியவற்றால் ஆக்கப்பட்ட எதிர்மறை அனுபவமே தேஜஸனுக்கு உண்டு.

தேஜஸனுக்கும் ஹிரண்யகர்ப்பனுக்கும் உள்ள சம்மந்தம் ரிண எண் இரண்டுக்கும் தன எண் இரண்டுக்கும் உள்ளது போன்றது. விஸ்வனுக்கும் விராட்டுக்குமோவெனில் ரிண எண் ஒன்றுக்கும் தன எண் ஒன்றுக்கும் உள்ளது. ரிண எண் ஒன்றுக்கு ரிண எண் இரண்டைவிட அதிக தன மதிப்பு இருப்பதாலும், ரிண எண் இரண்டுக்கும் தன எண் இரண்டுக்கும் உள்ள தூரம் ரிண எண் ஒன்றுக்கும் தன எண் ஒன்றுக்கும் உள்ளதைவிட அதிகமானதாலும், விஸ்வனுக்கு தேஜஸனைவிட அதிக விவகார மதிப்பு இருப்பதோடு தேஜஸன் ஹிரண்யகர்ப்பனுடன் இணைந்திருப்பதைவிட விராட்டுடன் அதிக நெருக்கமாக இணைந்திருக்கிறது. தேஜஸனும் பிரக்ஞனும் முறையே ஹிரண்ய கர்ப்பனுடையவும் ஈஸ்வரனுடையவும் பாகங்கள், ஆயினும் எதிர்மறை மதிப்புக்களுடைய அளவுக்குட்பட்ட பிரதி பிம்பங்கள் நேர்முகமாகவும் குணம் நிறைந்ததும் அல்ல. அல்லாவிடில் ஈஸ்வரன் ஒரு பிரம்மாண்ட அஞ்ஞானப் பிண்டமாகத்தான் இருக்க வேண்டியிருக்கும். ஏனெனில் தூக்கநிலையே இயல்பான அனுபவமாயுடைய பிரக்ஞர்கள் யாவர்களுடைய மொத்தத் தொகையாகவே ஈஸ்வரன் காட்டப்படுகிறார். அத்தூக்க நிலையில் அக்ஞானம் உள்ள உணர்வை மறைக்கிறது. பிரக்ஞையும் ஈஸ்வரனும் ரிண எண் மூன்றும் தன எண் மூன்றும் போன்றவை, அவற்றின் தொடர்பு முற்றிலும் மாறுபட்டது. ஒரு மனிதன் ஒரு ஆற்றங்கரையில் நின்று கீழே தனது பிரதிபிம்பத்தை நோக்குவதாகக் கொள்வோம். உயர்ந்து தோன்றுவது தாழ்ந்து தோன்றுகிறது - மூலத்தலை பிம்பத்தலையினின்று மிகத் தொலைவு. மிகத்தாழ்வில் இருப்பது மிக உயரமாகத் தோன்றுகிறது. - மூலப் பாதங்கள் பிம்பப்பாதங்களுக்கு மிக அருகில் உள்ளன - இதேபோல், மெய்ப் பொருளின் தோற்றங்களில் தலை சிறந்ததாய் சர்வக்ஞனும் சர்வசக்திமானுமான ஈசுவரன் முழு அக்ஞானமும் சக்தியின்மையும் கொண்ட எதிர் மறையான தூக்க அனுபவத்தின் எதிரிடைப் பிரதிரூபம். நதிக்கரையில்

நிற்கும் மனிதனின் பாதத்தை விராட்டும் விஸ்வம் பிம்பப்பாதத்தையும் குறிக்கும். தேஜஸனுக்கும் ஹிரண்ய கர்ப்பனுக்கும் அல்லது பிரக்ஞனுக்கும் ஈசுவரனுக்கும் உள்ளதைவிட விஸ்வன் விராட்டுடன் அதிகப் பிரக்ஞையுடன் தொடர்பு கொண்டுள்ளது. ஏனெனில் இடுப்பு பிம்பத்தின் இடுப்புக்கும் தலைபிம்பத்தலைக்கும் உள்ளதைவிட பாதம் பிம்பப்பாதத்திற்கு அதிக அருகில் இருக்கிறது. இந்தத் திருஷ்டாந்தங்கள் எதிர்மறை மதிப்புள்ள கனவைக் காட்டிலும் ஜாக்கிரதம் அதிக விவகார உண்மையுடையது என்று காட்டுகிறது. இங்கு கொடுக்கப்பட்டிருக்கும் திருஷ்டாந்தங்களில் அவற்றின் தாத்பர்யத்தைக் கருதவேண்டுமே தவிர சப்தார்த்தத்தையல்ல, ஏனெனில் விஸ்வன், தேஜஸன், பிரக்ஞன் ஆகியவை முறைப்படி விராட், ஹிரண்யகர்ப்பன், ஈஸ்வரன் ஆகியோரின் பிரதிபிம்பங்கள் மட்டுமல்ல, குணங்கள் முறுக்கி வளைக்கப்பட்டும் அனுபவங்கள் உண்மையினின்று பிடுங்கப்பட்டும் உள்ள அவற்றின் அடங்கிய சொரூபங்களுமாம்.

## VI

கர்த்தாவின் அனுபவமுறை வரையில் பார்த்தால் மனதில் எது இருக்கிறதோ அது வெளிப் பொருள்களில் இருப்பதாக அனுபவிக்கப்படுகிறது என்பது உண்மை. ஆனால் வஸ்துக்கள் தங்கள் வரையில் கர்த்துருத்வ மனத்தின் சிருஷ்டிகள் அல்ல. ஈஸ்வர சிருஷ்டிக்கும் ஜீவ சிருஷ்டிக்கும் இடையில் பெரிய வேறுபாடு இருக்கிறது. வஸ்துக்களின் இருப்பு ஈஸ்வர சிருஷ்டிக்கு உரியது. ஆனால் வஸ்துக்களுக்கும் அனுபவிக்கும் கர்த்தாவுக்கும் இடையில் உள்ள தொடர்பு ஜீவ சிருஷ்டியாகும். ஈஸ்வர சிருஷ்டியாகிய ஜகத்தில் அடங்கியுள்ள வஸ்துக்களில் ஜீவன் ஒருவன். ஆகவே, ஜீவன் உலகத்தைப் படைத்தவனாக உரிமை கொண்டாட முடியாது. அது மனோ விஞ்ஞான அனுபவத்தின் தனது சொந்த கர்த்ருத்வ முறைகளைப்

படைத்தது மட்டுமே. விழிப்பு அனுபவம் ஒரு உணர்வு, கனவு அனுபவம் ஒரு ஞாபகம். உணர்வு ஞாபகத்துக்கு முந்தியிருப்பதுபோல் விழிப்பு கனவுக்கு முந்தியிருக்கிறது. அதாவது, கனவு சுவடுகளின் வடிவத்தில் விழிப்பு அனுபவத்தின் ஞாபகமே. பிரம்மத்துக்கு விழிப்பு உலகம் உண்மையற்றது. ஆனால் தனி நபருக்கு அல்லது ஜீவனுக்கோ ஜீவத்தன்மை நிலைத்திருக்கும் வரையில் அது விவகார உண்மையுள்ளது.

VIII

விழிப்பு உலகத்துக்கு விவகாரிக உண்மை அல்லது வியவகாரிக ஸத்தா உண்டு என்பதால் அது பாராமத்திகப் பொருளில் உண்மை என்று நிரூபிப்பது ஆகாது. முன்னே சொல்லப்பட்டுள்ள காரணங்களால் ஒத்திட்டுப்பார்க்குமிடத்து விழிப்பு, கனவு அனுபவத்தைவிட உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. ஆனாலும் உயர்ந்த உண்மையின் நிலையிலிருந்து நோக்குமிடத்து விழிப்பு அனுபவமும் உண்மையற்றதே. விழிப்பு நிலையில் கனவு கடக்கப்படுவது போல் விழிப்பு உலகமும் கூட ஆத்ம ஞான நிலையில் கடக்கப்பட்டு விடுகிறது.

## 14. விழிப்பு அனுபவமும் கனவு அனுபவத்தைப் போன்றே பொய்யானது

I

விழிப்பிலும் கனவிலும் இரண்டிலும் வஸ்துக்கள் கர்த்தாவிலிருந்து வேறாக "அறியப்படுகின்றன" அல்லது "பார்க்கப்படுகின்றன" "பார்க்கப்படுதல்" என்பது இருவகை அனுபவங்களுக்கும் பொது. கனவைப் போலவே விழிப்பிலும் கர்த்தா - வஸ்து என்னும் தொடர்பு உள்ளது. இது இரண்டுக்கும் இடையிலுள்ள ஒற்றுமை. "ஏதோ ஒன்று ஒரு பொருளாகப் பார்க்கப்படுகிறது" என்றால் "ஏதோ ஒன்று தன்னைவிட வேறாக இருக்கிறது" என்று அர்த்தம்.

தன்னையல்லாதது என்பதன் அனுபவம் பிரமையானது. ஏனெனில், தானல்லாதது உண்மையாயிருப்பின் தான் வரம்புக்குட்பட்டதாயும் உண்மையற்றதாயும் ஆகும். தன்னையல்லாதது என்னும் மாயீக அனுபவம் விழிப்பு கனவு இரண்டுக்கும் பொது. விழிப்பில், மனது புலன்களின் மூலம் அனுபவங்களை அடைகிறது; கனவிலோ மனது தானே அனுபவங்களை அடைகிறது. இரு நிலைகளிலும், வெளியிலாவது உள்ளேயாவது மனதுதான் அனுபவிக்கிறது. கனவு விழிப்பினால் கடக்கப்படுகிறது. விழிப்பு துரிய நிலையால் கடக்கப்படுகிறது. ஆகவே கனவு விழிப்பு இரண்டும் முரண்படுகின்றன. விழிப்பு கனவை மறுக்கிறது. கனவு விழிப்பை மறுக்கிறது. ஒன்று இருக்கும்போது மற்றொன்று இல்லை. இரண்டில் எதுவும் தொடர்ந்து இருப்புடையவனாயில்லை. இது இரண்டின் உண்மையின்மையையும் நிரூபிக்கிறது.

துவந்த்வம் (இரட்டை) உண்மையல்ல. ஏனெனில் துவந்த்வம் நித்தியத்வத்துக்கு எதிரிடையானது. துவந்த்வம் இல்லாமல் அறிதல் இல்லை. ஆகவே, கனவிலும் சரி விழிப்பிலும் சரி அறியப்படுவது என்பது உண்மையற்றது. விழிப்பு இல்லாவிடில் கனவு உண்மையாக இருக்கிறது. கனவு இல்லாதபோது விழிப்பு உண்மை. ஆகவே இரண்டும் உண்மையற்ற அனுபவங்கள். அவை தங்கள் இருப்புக்கு ஒன்றையொன்று ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. ஒரு நிலையை மற்றொன்றோடு ஒத்து நோக்காமல் ஒருவன் தான் கனவு காண்கிறானா விழித்திருக்கிறானா என்பதைக் கூறமுடியாது. விழிப்பிலும் கனவிலும்கூட ஆசைகளே அனுபவங்கள் அனைத்தையும் ஆள்கின்றன. விழிப்பு என்பது ஆசைகள் ஸ்தூல சரீரத்தால் செயலாற்றுவது. கனவு ஆசைகள் மனத்தால் செயலாற்றுவது. விழிப்பில் இந்திரியங்கள் ஆசைகளால் இயக்கப்படுகின்றன. கனவில் மனது ஆசைகளால் இயக்கப்படுகிறது. இரு நிலைகளும் ஓடும் அருவிகளைப் போன்றவை. அவை ஒரே நிலையில்

எப்போதும் நிலைத்திருப்பதில்லை. எது எப்போதும் நிலைத்திருக்கிறதோ அதுவே உண்மையானது. கனவும் விழிப்பும் ஆதியும் அந்தமுமுடையவை. மாறுதல் அறியப்படும் பொருள்கள் யாவற்றிற்கும் இயல்பு. மாறுதல் என்றால் ஆதியிலும் அந்தத்திலும் இல்லாமை என்று பொருள். தொடக்கத்திலும் முடிவிலும் எது இல்லையோ அது இடையிலும் இல்லைதான். ஆகவே விழிப்பு கனவைப்போன்றே உண்மையில்லாதது.

## III

கனவுக்குக் காரணமாகயிருப்பதால் விழிப்பு உண்மையானது என்றும் கனவு விழிப்புக்குக் காரணமல்ல என்றும் சிலர் ஆக்ஷேபணை எழுப்பலாம். ஆனால் இந்த ஆக்ஷேபணைக்கு ஆதாரமில்லை. விழிப்பு ஒரு காரணமானால் அது உண்மையாக இருக்கவேண்டும். அது உண்மையானால் அது எப்போதும் இருத்தல் வேண்டும். விழிப்பே உண்மையற்றதாயிருக்கிறது. ஏனெனில் அது எப்போதும் இருக்கவில்லை. காரணமே உண்மையற்ற தானால், அது ஒரு உண்மைப்பயனை எவ்வாறு உண்டாக்க முடியும். இவை இரண்டும் உண்மையற்ற நிலைகள், விழிப்பு நிலையில் வயிறார உண்பவன் கனவு நிலையில் பசித்திருப்பதாக உணரலாம். கனவில் உண்டவன் விழித்துப் பசியை உணரலாம். ஒரு குறிப்பிட்ட நிலைமையில்தான் விஷயங்கள் உண்மையாகத் தோற்றமளிக்கின்றன. அவை எப்போதும் உண்மையாக இல்லை. எப்போதும் உண்மையல்லாதது தோற்றமே. ஆகவே உண்மையற்றதே.

## IV

உருவம் உடைய எந்த வஸ்துவும் உண்மையல்ல. உருவங்கள் நிச்சயத்துக்கும் அறிவுக்கும் உரிய சிறப்பான முறைகள். அவைகளே முடிவானவையல்ல. விழிப்பில் ஸ்தூல வடிவங்கள் இருக்கின்றன. எவ்வாறாயினும் யாவும் கால தேசத்தால் வரையறுக்கப்பட்ட உருவங்கள் மாத்திரமே.

அந்த குறிப்பிட்ட மனநிலை இருக்கும் வரையில்தான் ஒரு உருவம் நிலைத்திருக்கிறது. வேறொரு மனோநிலை இருக்கும் போது அனுபவத்தின் உருவங்களும் மாறுகின்றன. ஆத்மஞானம் அடையப்பட்டவுடன் உலகத்தின் உருவம் மறைவதற்கு இதுவே காரணம்.

## V

கனவிலும் விழிப்பிலும் இரண்டிலும் வெளித் தோற்றங்கள் உண்மையாகக் கொள்ளப்படுகின்றன. அந்தர்முக காரியங்கள் உண்மையாகக் கொள்ளப் படவில்லை (அதாவது அவை புறக்கணிக்கப்படுகின்றன) விழிப்பில் நாம் உண்மைக்கும் உண்மையின்மைக்கும் வேற்றுமை காட்டினால் கனவிலும் அப்படியேதான் செய்கிறோம். கனவு அது இருக்கும் வரையில் உண்மை, விழிப்பு அது இருக்கும் வரையில் உண்மையே. விழிப்பின் நிலையினின்று பார்த்தால் கனவு உண்மையற்றது. அதே போல்தான் கனவு காண்பவனுக்கு விழிப்பு. உயர்ந்த உண்மை நிலையினின்று நோக்கினால் விழிப்பும் கனவைப் போலவே பொய்யானது.

## VI

விழிப்பு நிலையில் வஸ்துக்கள் சில குறிப்பிட்ட நோக்கத்தை நிறைவேற்றுகின்றன என்றும் கனவு வஸ்துக்கள் பயனற்றவை என்றும் கூறப்படலாம். இந்த வாதம் சரியானதல்ல. ஏனெனில் விழிப்பு நிலையில் வஸ்துக்கள் ஒரு நோக்கத்தை நிறைவேற்றுவதாகப் பார்க்கப்படும் இயல்பு கனவினால் மறுக்கப்படுகிறது. அதுபோல் கனவு வஸ்துக்கள் பயன்படுவதாகக் காண்பதும் விழிப்பினால் மறுக்கப்படுகின்றன. விழிப்பில் வஸ்துக்கள், நிலைகள் முதலியவற்றின் உபயோகமும், மதிப்பும் கனவு நிலையில் நீக்கப்படுகின்றன. இதேபோல் கனவில் நிலைகளும் அனுபவங்களும் விழிப்பில் ரத்து செய்யப் படுகின்றன. ஒரு குறிப்பிட்ட நிலையில்தான் வஸ்துக்கள்

ஒரு பலனுக்கு மார்க்கங்களாகச் செயலாற்றுகின்றன. எல்லா நிலைகளிலும் அல்ல. விழிப்பின் காரணரூபமான சம்பந்தம் கனவில் பயனற்றதாக்கப்படுகிறது. கனவில் சம்பந்தமும் விழிப்பில் பயனற்ற தாக்கப்படுகிறது. விழிப்பின் தர்க்க ரீதிக்கிரமம் அதற்கு மட்டுமே செல்லுபடியாகும் கனவுக்கல்ல. அதேபோல் கனவு அதன் சொந்த நிலைக்கே செல்லும்படி விழிப்புக்கும் கனவுக்கும் அதற்கும் உரிய ஒழுங்கு முறைகள் உண்டு. ஒவ்வொன்றும் தன் வரையில் உண்மையாகத் தோன்றினபோதிலும் ஒன்று இன்னொன்றால் மறைக்கப்படுகிறது. இவ்வாறு இரண்டு நிலைகளின் திடமும் உதறிவிடப்படுகிறது.

## VII

கனவு வஸ்துக்கள் விசித்திரமாயும், பிரமிக்கத்தக்கதாயும் இயல்புக்கு விரோதமாயும் இருக்கின்றன. ஆகவே விழிப்பு கனவு போன்றதல்ல என்று ஆக்ஷேபிக்கப்படலாம். ஆனால் கனவில் அனுபவங்கள் எவ்வளவு அசம்பாவிதமாய் அசாதாரணமாய் இருந்தாலும் கனவு காண்பவனுக்கு அசாதாரணமாக இருக்கவில்லை. அவை விழிப்பாக வேறு நிலையில் தான் அசாதாரணமாகத் தோன்றுகின்றன. எது உண்மையில் அசம்பாவிதமானது, எது சாதாரணமும் உண்மையுமானது என்று யாரும் கூறமுடியாது. வஸ்துக்களுக்கு மதிப்புகளை அளிப்பது மனது. சாதாரணம் அசாதாரணம் என்றும் அதன் அபிப்பிராயம், அது இருக்கும் நிலைக்குத் தக்கபடி மாறுகிறது. விழிப்பிலும் சரி தூக்கத்திலும் சரி எல்லாக்காலத்தும் சாதாரணம், அழகு, ஒழுங்கு ஆகியவற்றிற்கு ஒரு நிலைத்த பிரமாணம் கிடையாது. தேசம், காலம் காரணத்தைப் பற்றி கனவு காண்பவன் சொந்த கோட்பாடு கொண்டிருக்கிறான். விழிப்பு நிலைக்கும் சொந்த அபிப்பிராயங்கள் உண்டு. ஒரு நிலை மற்றொன்றோடு ஒத்திடப்படும்போது அறிவுக்கு ஒவ்வாததாக ஆகிறது. இது இரண்டு நிலைகளும் தர்க்கரீதிக்கு ஒவ்வாதவை என்று காட்டுகிறது. ஆகவே உயர்ந்த நிலையிலிருந்து நோக்கினால் அது அறிவுக்கு ஒவ்வாதது.

## VIII

விழிப்பு அனுபவத்து உலகம் உண்மையற்றது. ஏனெனில் அது பிரம்மாண்ட மனத்தின் கற்பனை. ஆத்மஞானத்தில் எல்லாத் தோற்ற அனுபவமும் பூரணமாக நின்று விடுகிறது என்ற விஷயம் தோற்றங்கள் யாவும் உண்மையற்றவை யென்று காட்டுகிறது. வெளி உருவங்கள் ஆந்திரீக சங்கல்பங்களின் உச்சாரணங்கள். ஆகவே, வெளி வஸ்துக்களுக்கு உண்மையான மதிப்பு இல்லை. அவை சங்கல்பங்கள் இருக்கும் வரையில் தான் இருப்பதாகத் தோன்றுகின்றன. இந்திரியங்கள் ஆந்திரீக அபிப்பிராயங் களை வெளிப்படுத்தி அவற்றை வஸ்துக்களின் வடிவங் களில் தோற்றுவிக்கின்றன. சங்கல்பங்கள் உள்ளுக்குள் இழுக்கப்படும்போது விஷய அனுபவமாகிய உலகம் முற்றிலும் மறைந்துவிடுகிறது. எல்லையற்ற கர்த்தா அதாவது ஆத்மா மாத்திரம் நிலைக்கிறது. உண்மையில் பஹிர்முகம் அந்தர்முகம் என்று ஏதுமில்லை. அஹமும் (நான்) அஹமல்லாததும், கர்த்தாவும் விஷயமும், யாவும் மனத்தின் கற்பனைகள் மாத்திரமே.

## IX

விழிப்பில் பார்க்கப்படும் வஸ்துக்கள் மனத்தின் கற்பனைகளேதான் என்பதல்ல. ஏனெனில் ஒருவனது மனது அவற்றை உணர்ந்தாலும் உணராவிட்டாலும் விழிப்பு அனுபவ வஸ்துக்கள் மற்ற ஜனங்களாலும் பார்க்கப் படுகின்றன என்று கூறப்படலாம். ஆனால் கனவு நிலையிலும் ஜனங்கள் வஸ்துக்கள் யாவும் கர்த்தாவின் கற்பனைகளேயாயினும் அனுபவ வஸ்துக்கள் மற்றவர்கள் உணர்வுக்கும் உட்பட்டவையே. விழிப்பில் நாம் இந்திரியக்கருவிகளின் மூலம் உணர்கிறோம். மனோபாவனைகளாய் மட்டுமல்ல என்று கூறக்கூடும். ஆனால் கனவு நிலைக்குரிய இந்திரியக்கருவிகளின் மூலம் பார்க்கிறோம். அக்கருவிகள் விழிப்பு நிலையைச் சேர்ந்தவைகளை விட உண்மையில் குறைந்தவையல்ல.

கனவு உண்மையற்றதானதால் நினைவும் (விழிப்பும்) உண்மையற்றதாகவே இருத்தல் வேண்டும்.

X

விழிப்பு அனுபவத்தின் விஷய உலகம் சுயேச்சையான இருப்புடையதாக இருக்க முடியாது. ஏனெனில் அதை உணரும் அல்லது கண்டறியும் கர்த்தாவின் விவகாரத்தில் அது உட்பட்டது. பொருள் அல்லது விஷயம் எனப்படுவதற்குக் காரணம் அது ஒரு கர்த்தாவால் கண்டறியப்படுகிறது. இதேபோல் கர்த்தா எனப்படுவது ஒரு கண்டுணரப்படும் பொருள் இருப்பதால்தான். இரண்டில் எதுவும் சுயேச்சையான இருப்புடையதல்ல. ஆகவே இரண்டும் உண்மையில்லாதவை என்று நிரூபித்துக் கொள்ளுகின்றன. கர்த்தாவும் விஷயமும் காரணகாரிய ரூபமாகத் தோன்றுகின்றன. காரணமின்றிக் காரியம் இல்லை. காரியமின்றி எதுவும் காரணமாயிருக்கமுடியாது. காரண காரிய சம்பந்தம் என்னும் கருத்தே தர்க்க நீதிக்கு ஒவ்வாதது. மனது ஒரு வஸ்துவை இன்னொன்றுடன் சம்பந்தப் படுத்தியே வஸ்துக்களைக் கண்டு உணர்ந்துகொள்கிறது. அறியப்படும் உலகம் முழுதும் புத்திக்கெட்டாத சம்பந்தங்களின் கமையே. மனது இவற்றைக் காரண காரியங்களாக ஒழுங்குபடுத்த முயலுகிறது. மேலும், காரண காரிய சம்பந்தம் என்பதேயில்லை. ஏனெனில் காரணமும் காரியமும் தொடர்ச்சியாயிருக்கின்றன. காரணம் மாறுதலின்றி இருப்பது என்ற ஒரு கால அளவே இருக்க முடியாது. காரணம் மாறுதலின்றிச் சிலகாலம் இருக்க முடியுமானால், அது எந்தக் காலத்திலாவது மாறவேண்டும் என்பதற்கே காரணம் இல்லை.

ஒன்று தொடர்ச்சியான காரண காரிய சம்பந்தம் இருக்க வேண்டும். இல்லாவிடில் காரண காரிய சம்பந்தமேயில்லை. காரண காரிய சம்பந்தம் தொடர்ச்சியாயிருந்தால், காரணமும் காரியமும் ஒன்றாய் விடுகின்றன. அவை ஒன்றைவிட்டு ஒன்று பிரிவில்லாதவையானதால், அவை ஒன்றேயாயின்

காரண காரிய சம்பந்தமே இல்லை என்று தான் அர்த்தம். காரண காரிய சம்பந்தம் இல்லையெனில், அனுபவ உலகம்கூட இல்லை. காரணம் கூறும் முறை முற்றிலுமே தர்க்கரீதிக்கு முரணானது. ஏனெனில் முதல் காரணமில்லாத காரணம் ஒன்றின் இருப்பு அவசியமாயிருக்கிறது. இல்லாவிட்டால் அதுவே அர்த்தமற்றது. முதலில் காரணமின்றிய காரணம் இருக்கிறது என்பதில் அர்த்தம் இல்லை. ஏனெனில், அதன்மூலம் நாம் காலத்துக்கு ஒரு தொடக்கத்தைப் படைக்கிறோம். காரண காரிய சம்பந்தம் உண்மையானால், அதை நீக்குவது ஒரு போதும் சாத்தியமாகாது. ஆனால் ஆத்மஞானம் காரண காரிய சம்பந்தச் சங்கிலியை முறித்துவிடுகிறது. ஆகவே, காரண காரிய சம்பந்தம் பொய்யானது. இக்காரணத்தால் அனுபவ உலகமும் கூட பொய்யானது. கனவிலும்கூட காரணத் தொடர்பான அனுபவம் இருப்பதால், விழிப்பு உலகம் கனவு உலகத்தைப் போன்றே பொய்யானது.

## 15. ஜாக்கிரதமும் கனவைப் போன்றே உண்மையில்லாதது

அஞ்ஞானிகள் அல்லது உலகாயத மக்களுக்கு இந்திரிய விஷயங்கள் முற்றிலும் உண்மை. ஞானிகள் அல்லது விவேகமும் விசாரணையுமுள்ளவர்களுக்கு அவை உண்மையற்றவை.

நீ காண்பதெல்லாம் பொய். இதில் சந்தேகமேயில்லை. கடுமையாக சூரியன் காயும்போது மான்கள் கானல் நீரில் நீரைக் காண்கின்றன. நீர் பருகும் பொருட்டு அவை அக்கானல் நீரை நோக்கித் தாவுகின்றன. அங்கே அவற்றுக்கு நீர் கிடைப்பதில்லை. சூரியப் பிரகாசத்தில் ஒரு சிறுவன் ஒரு வெள்ளித்துண்டை எடுக்க ஓடுகிறான். அவன் வெள்ளியை அணுகும்போது வெள்ளியைக் காண்பதில்லை. அவன் காண்பது முத்துச் சிப்பியைத்தான். இரவில் ஒரு

பெண் தண்ணீர் கொண்டுவரப் போகும்போது வழியில், பாம்பைப் பார்த்துப் பயமடைகிறாள். விளக்கு கொண்டு போய் அதைப் பார்க்கும்போது பழுதையைத்தான் பார்க்கிறாள். அங்கு பாம்பைக் காணோம். ஒரு இளைஞன் கனவில் ஒரு மங்கையைத் தழுவி உள்ளபடி வீரியம் வெளிவருகிறது. அவன் விழித்துக் கொள்ளும்போது மங்கை காண்பதில்லை. நீ வானத்தில் நீல நிறத்தைப் பார்க்கிறாய். வானம் நீல மண்டபம் போல் தோன்றுகிறது. ஒருவன் ஆகாய விமானத்தில் செல்லும்போது நீல மண்டபம் எதுவும் இல்லாததோடு அது தூரத்தில் தோன்றுவதைக் காண்கிறான். நீ பார்ப்பது எதுவும் உண்மையில் இல்லை. அவை கனவில் தோன்றும் வஸ்துக்களைப்போல் மாயீகத் தோற்றங்களே. ஆனால் வஸ்துக்கள் தோன்றி மறையும் போதும் அவற்றைப் பார்ப்பவன் இருக்கிறான்.

கனவு நிலையில் பெரிய மலைகள், யானைகள், நகரங்கள், பேராறுகள் முதலியவை தொண்டையில் இருக்கும் ஹிதநாடி என்னும் நுட்பமான நாடியில் காணப்படுகின்றன. இந்தப் பெரும் பொருள்கள் அங்கு இருப்பதற்கு அந்த நுட்ப நாடியில் இடம் இல்லை. ஆகவே கனவு வஸ்துக்கள் பொய்யானவை அல்லது மாயீகமானவை. விழிப்பு நிலையில் தோன்றும் வஸ்துக்கள்கூடப் பொய்தான்.

கனவில் பல ஆண்டுகளின் சம்பவங்களை நீ சில நிமிடங்களில் காண்கிறாய். பிரம்மாவின் ஒரு நாளைக்குள் நமக்குப் பல ஆயிரம் சதுர்யுகங்கள் கழிகின்றன. தேவர்களின் ஒரு நாளைக்குள் நமக்கு ஆறு மாதங்கள் கழிகின்றன. ஒரு பெரிய மலைப்பாம்பு இரண்டாம் முறை உணவு கொள்வதற்குள், மனிதன் நூறு முறை உண்கிறான். ஒரு குழந்தை கருவில் வளரும் காலத்துக்குள், சிறு பூச்சிகள் கோடிக்கணக்காகத் தங்கள் வர்க்கத்தை விருத்தி செய்துவிடுகின்றன. சந்தோஷமுள்ள மனிதன் ஒருவன் ஒரு இரவை ஒரு நிமிஷமாகக் கழிக்கிறான். துக்கத்தில் ஆழ்ந்த

மனிதனோ ஒரு இரவைப் பல்லாண்டுகளாகக் கழிக்கிறான். ஆகவே காலமும் எல்லாச் சமயங்களிலும் எல்லோருக்கும் ஒரேவிதமாகத் தோன்றுவதில்லை. காலத்தால் தோன்றி அழியும் வஸ்துக்களும் மாயீகம்.

உன் கனவில் நீ பார்க்கும் வஸ்து, விழிப்பு நிலையில் அதே இடத்தில் அதே மாதிரி காண்பதில்லை. இதே போல் ஒருவர் இராமன் என்பவர் நல்லவர் என்று கூறலாம். அதே இராமன் இன்னொருவருக்குக் கெட்டவராகத் தெரிகிறார்.

கனவில் காணப்படும் வஸ்துக்கள் விழிப்பு நிலையில் சரியாக இருப்பதில்லை. விழிப்பு நிலையில் பார்க்கும் வஸ்துக்கள் விழிப்பு நிலையிலேயே வேறாகத் தோன்றுகின்றன. கனவு நிலையில் நீ விழிப்பு நிலையில் காணும் வஸ்துக்களை நினைவு கூறுவதில்லை. நான் "இன்னின்ன வஸ்துக்களை விழிப்பு நிலையில் பார்த்தேன். நான் இப்போது அவற்றைக் காணவில்லை" என்று நீ கனவு நிலையில் வஸ்துக்களை ஞாபகம் வைப்பதில்லை. ஆகவே விழிப்பு நிலை வஸ்துக்கள் கனவு வஸ்துக் களைவிடப் பொய்யாக உள்ளன. சுருதிகளும் மகான்களும் உலக வஸ்துக்கள் கனவு வஸ்துக்களைப் போலவே பொய்யானவை என்று உறுதியாகக் கூறுகின்றார்கள். அவர்கள் உலகத்தை தீர்க்க கனவு அல்லது நீண்ட கனவு என்கிறார்கள்.

ஆரம்பத்திலும் முடிவிலும் இருப்புடனில்லாதது உண்மையில் இடையிலும் இல்லைதான். அது உண்மையற்றது. இரவில் பழுதையில் கண்ட பாம்பு விளக்கைக் கொண்டுவரும்போது இல்லை. அது இடையில்தான் தோன்றுகிறது. இதேபோல் முத்துச்சிப்பியில் வெள்ளியைக்காண்பது, கானல் நீரில் நீரைக்காண்பது மேகங்களில் நகரத்தைக் காண்பது முதலியன. ஆகவே அவை தோன்றும் போதும் உண்மையற்றவை. கனவு வஸ்துக்கள் கூட பகல் நேரத்தில் இல்லை. இதேபோல்

இவ்வுலகத்து வஸ்துக்கள் இடையில்தான் தோன்றுகின்றன. ஆகவே அவை உண்மையற்றவை.

"நீ விழிப்பு நிலையில் உண்ணும் உணவும் பருகும் நீரும் உனக்குத் திருப்தியளிக்கின்றன. ஆனால் கனவில் உண்ணும் உணவினால் பசி தணிவதில்லை. ஆகவே கனவு வஸ்துக்கள் பொய்யானவை. விழிப்பு நிலையின் வஸ்துக்கள் உண்மையானவை" என்ற ஆக்ஷேபணை எழக்கூடும். விழிப்பு நிலையில் வயிறார உண்டு நித்திரைக்குச் செல்கிறவன் கனவில் பசியினால் வாடுகிறான். கனவில் அறுசுவை விருந்து உண்டவன் விழித்தவுடன் பசியை உணருகிறான். இதுபோல் விழிப்பு நிலையில் செய்யும் செயல்களின் பயன் கனவில் தென்படுவதில்லை. கனவுச் செயல்களின் பயன் விழிப்பில் இல்லை. ஆகவே, விழிப்பு நிலையும் கனவைப் போலவே பொய்யானது.

"ஒரு மனிதன் நான்கு கைகளுடையவனாயும் ஆகாயத்தில் பறப்பதாயும் கனவு காண்கிறான். இதுபொய்யன்றோ? ஜாக்கிரத நிலை இதைப் போலல்ல. ஆகவே அது உண்மையானது" என்று ஒரு ஆக்ஷேபணை உண்டாகலாம். ஒரு மனிதன் தன் கர்மத்தின் பயனாக தேவனாகவோ, பிராணியாகவோ, பறவையாகவோ பிறப்பை அடைகிறான். விழிப்பு நிலையிலேயே அவன் ஆயிரம் கைகள் படைத்த இந்திரனாகிறான். அவன் பட்சியாகி விழிப்பு நிலையிலேயே ஆகாயத்தில் பறக்கிறான். அவன் நாற்கால் பிராணியாகிறான். நூறு கால்களையுடைய மரவட்டையாகிறான். அல்லது கால்கள் இல்லாத பாம்பாகிறான். ஆதலால் நினைவு நிலையும் கனவு நிலையும் ஒன்றே. கனவில் சில பொருள்கள் பொய்யாகவும், சில உண்மையாகவும் இருப்பது போன்றே விழிப்பு நிலையிலும் பழுதையில் பாம்பு போல் சில வஸ்துக்கள் பொய்யாகவும் குடம், துணி போன்றவை உண்மையாகவும் இருக்கின்றன. கனவு நிலை வஸ்துக்களும் விழிப்பு நிலை

வஸ்துக்களும் ஆத்மா அல்லது பிரம்மத்தைப்போல் பாரமார்த்திக உண்மை உள்ளவை அல்ல.

முள்ளை முள்ளால் வாங்குவது போலவும், துணியின் அழுக்கை உப்பு மண்ணாகிய அழுக்கால் போக்குவது போலவும், இரும்பை மற்றொரு இரும்பால் வெட்டுவது போலவும், ஆத்மா அல்லது பிரம்மம் மட்டுமே யாவற்றுமாயினும், நீ குரு அல்லது ஒரு தேவதை போன்ற வேறொரு போலி வஸ்துவின் உதவியை நாடவேண்டியிருக்கிறது. கனவில் ஒரு பொய் வஸ்து உனக்கு உண்மையான அச்சத்தை விளைவித்து உன்னை விழித்துக் கொள்ளச் செய்கிறது. சில சமயங்களில் நீ கனவில் காண்பது உண்மையாய் விடுகிறது. கனவில் உண்மையல்லாத ஒருபெண் உண்மையாக விந்து வெளிவரச் செய்கிறாள். கடவுளும் குருவும் பிரம்மத்தைப்போல் அவ்வளவு உண்மையாயிராவிட்டாலும், அவர்கள் இந்த சம்சாரம் அல்லது ஜனன — மரண சாகரத்தைக் கடப்பதற்கு உனக்கு உதவி புரியும் படகுகள். அவர்களுடைய அருளின்றி நீ அமரத்துவத்தையாவது நித்தியானந்தத்தையாவது அடைதல் இயலாது.

ஆத்ம ஸ்வரூபா! பிரம்மம் மாத்திரமே உண்மையில் இருப்புள்ளது. ஜீவனும் உலகமும் பொய்! இந்த மாயீக அஹங்காரத்தைக்கொல். பிரம்மத்தோடு ஒப்பிடும்போது உலகம் உண்மையற்றது. குழந்தை உள்ளம் கொண்ட பேதையர்க்குக் கனவுகள் உண்மையாயிருப்பதுபோல், ஆசாபாசம் நிறைந்த உலகாயத மனிதனுக்கு உலகம் உறுதியாக உண்மை. ஞானி அல்லது முக்தனுக்கு உலகம் இல்லை.

## 16. மனத்தின் வர்ண ஜாலத்தை நீக்கு

பழைய காலத்தில் மார்வாரம் அல்லது ராஜபுதனத்தில் மிகத்திறம்படைத்த சாயக்காரர்கள் இருந்தார்கள். அவர்கள்

ஸ்திரீகளின் சேலைகளுக்கு ஏழு வர்ண சாயங்கள் போடுவார்கள். சிலநாட்கள் தோய்த்து உடுத்தினால் ஒரு வர்ணம் போய் மற்றொரு வர்ணம் தோன்றும். சில நாட்களுக்கு அத்துணியில் மூன்றாவது சாயம் வெளிப்படும். மறுபடி நான்காவது சாயம் இவ்வாறே. இதேபோல்தான் மனது உலகின் பல்வேறு வஸ்துக்களுடனும் சேரும்போது வர்ண ஜாலத்தை அடைகிறது. மனது சாத்வீகமாயிருக்கும் போது, அதற்கு வெண்ணிறம் உண்டாகிறது; அது ராஜஸீகமாயிருக்கும்போது சிவப்பு நிறம் சேர்கிறது; அது தாமஸீகமாகும்போது கருமை நிறம் பெறுகிறது.

மனது அறியும் ஐம்புலன்களோடும் விளையாடி விழிப்பு நிலையில் அனுபவங்களை அடைகிறது. அச்சுவடுகள் காரண சரீரத்தில் பதிகின்றன. அஞ்ஞானம் அல்லது காரணசரீரம் ஒரு கருமையானது தான் அல்லது துணிபோல் இருக்கிறது. அதில் உனது முன் பிறப்புக்களின் சம்ஸ்காரங்கள் அடங்கியிருக்கின்றன.

மனது எப்போதும் சக்கரம்போல் சுழல்கிறது. அது புலன்களின் வாயில்கள் மூலமாக பற்பல இந்திரிய அனுபவங்களை அடைகிறது.

கனவு நிலையில் இந்திரியக்கதவுகள் அல்லது பலகணிகள் மூடப்பட்டுள்ளன. மனது ஏகாந்தமாக இருந்து விளையாடுகிறது. அதுவே கர்த்தா அதுவே விஷயம். (வஸ்து). அது மலைகள், நதிகள், தோட்டங்கள், ரதங்கள் வாகனங்கள் முதலியன போன்ற பல்வேறு வகையான வஸ்துக்களைத் தோற்றுவிக்கிறது. அது விசித்திரக் கலவைகளையும் அற்புதச் சேர்க்கைகளையும் உண்டாக்கிறது. சில சமயங்களில் காரண சரீரத்தில் பதிந்திருக்கும் முன் பிறப்புகளின் அனுபவங்கள் கனவு நிலையில் மின்னல் போல் வெளிக்காட்டுகின்றன.

ஆத்மாவைத் தியானிப்பதன் மூலம் மனத்தின் வர்ண ஜாலங்களை நீக்கு. மனதைச் சிற்றின்ப விஷயங்களில்

ஓடும்படி விடாதே. பிரம்மவிசாரம், சிந்தனை நிஷ்டை ஆகியவற்றின் மூலம் விக்ஞானமயகோசம் அல்லது அறிவை வளர்த்து அக்கோட்டைக்குள் உன்னை பத்திரப்படுத்திக் கொள். விக்ஞானமய கோசம் பலத்த கோட்டை போல் உதவும். அது இந்திரிய சம்ஸ்காரங்களை காரண சரீரத்தில் பதியும்படி விடாது. அது காரண சரீரத்தின் சம்ஸ்காரங்களை வெளிவரவிடாது. அது இரட்டை நோக்கத்தை நிறைவேற்றும்.

மனத்தின் வர்ண ஜாலங்கள் நீக்கப்பட்டபோது பரம்பொருள் அல்லது பிரம்மத்தைத் தியானிப்பதன் மூலம் நீ கனவுகளினின்று விடுபடுவாய்.

பிரம்மஞானிகள் அல்லது மகான்கள் கனவு காண்பதில்லை - ஜாக்கிரதம், கனவு, சுழுப்தி ஆகிய மூன்று நிலைகளுக்கும் அப்பாற்பட்ட துரியம் அல்லது நித்தியானந்தமாகிய நான்காவது நிலையை நீங்கள் யாவரும் அடைவீர்களாக.

## 17. உபநிஷத்துக்களும் கனவுகளும்

"புருஷனுக்கு இவ்வுலகம், மறு உலகம் ஆகிய இரு இருப்பிடங்கள் தான் உண்டு. மூன்றாவதாகிய கனவு நிலை, இரண்டுக்கும் சந்திப்பில் இருக்கிறது. சந்திப்பில் இருந்து கொண்டு அது இவ்வுலகம், மறு உலகம் ஆகிய இரு இருப்பிடங்களையும் நோக்குகிறது. மறுமையில் ஸ்தானத்தை அடைவதற்கு எவ்வளவு பிரயாசையுடன் முயல்கிறானோ அவ்விகிதப்படி அவன் இன்ப துன்பம் இரண்டையும் காண்கிறான். அவன் கனவு காணும்போது எல்லாப் பொருள்களும் (விழிப்பு நிலை) அடங்கிய இவ்வுலகத்தின் சம்ஸ்காரங்களைச் சிறிதளவு எடுத்துக்கொண்டு, தானே சரீரத்தை ஒதுக்கிவிட்டு அதற்குபதில் தனது ஒளியினாலும் கனவுகளினாலும் தனது ஜோதியை வெளிப்படுத்தக்கூடிய

ஒரு கனவு சரீரத்தைச் சிருஷ்டித்துக்கொள்கிறான். இந்நிலையில் புருஷன் தானே கலப்பற்ற ஜோதியாகிறான்."

(பிருஹ.உ.ப.அத். IV 39)

"அங்கு ரதங்களாவது, அவற்றில் கட்டும் குதிரைகளாவது, சாலைகளாவது இல்லை. ஆனால் அவன் ரதங்களையும், குதிரைகளையும் சாலைகளையும் படைத்துக் கொள்கிறான். அங்கு இன்பங்கள், மகிழ்ச்சிகள், குதூகலங்கள் இல்லை. ஆனால் இன்பங்களையும் மகிழ்ச்சிகளையும் குதூகலங்களையும் அவன் படைக்கிறான். அங்கு குளங்கள், ஏரிகள் ஆறுகள் இல்லை. ஆனால் அவன் குளங்கள், ஏரிகள், ஆறுகளை உண்டாக்குகிறான், ஏனெனில் அவன் கர்த்தா."

(பிருஹ. உப அத் IV 3-10)

"ஏகாந்தமாகச் சஞ்சரிக்கும் தேவனைப்போன்ற புருஷன் கனவில் தேகத்தை ஒருபுறம் வைத்துவிட்டுதான் விழித்திருப் பவனாய் அவயவங்களின் ஒளிவீசும் செயல்களை உடன் எடுத்துக்கொண்டு, தூங்குகிறவர்களைக் கவனிக்கிறான். மறுபடி அவன் விழிப்பு நிலைக்கு வருகிறான்."

(இபித் IV 3-11)

"அழிவற்றவனாய்த் தனியாய்ச் சஞ்சரிக்கும் தேஜஸ் வியான புருஷன் பிராண சக்தியினால் தேகமாகிய அசுத்தம் தங்குமிடத்தைக் காத்துக்கொண்டு அதைவிட்டு வெளியே சஞ்சரிக்கிறான். அழிவற்றவனான அவன், தன் சித்தம் செல்லும் வழியில் செல்கிறான்."

(இபித் IV 3 - 12)

"கனவு உலகத்தில் அத்தேஜஸ்விமேல் நிலைகளையும் கீழ் நிலைகளையும் அடைவதோடு பல்வேறு உருவங்களை எடுத்துக் கொள்கிறான். ஸ்திரீகளின் சங்கத்தில் அவன்

இன்ப நுகர்வதாயும் அல்லது சிரிப்பதாயும் அல்லது பயங்கரக் காட்சிகளைக் காண்பதாயும் தோற்றமளிக்கிறான்."

(பிருஹ. உப IV 3-13).

"ஒவ்வொருவரும் அவனது விளையாட்டைப் பார்க்கிறார்கள். ஆனால் யாரும் அவனைப் பார்ப்பதில்லை. "அவனைத் திடீரென்று எழுப்பாதீர்கள்" என்று சொல்கிறார்கள். எந்த இந்திரியங்களின் வாயில்களின் மூலம் அவன் கனவு நிலையில் புகுந்தானோ அதே வாயில்கள் மூலம் புருஷன் திரும்பாவிட்டாலும், அவன் வேறு எந்த மாதிரியில் திரும்பப் புகுந்தாலும், தீர்ப்பது கடினமான குருடு செவிடு முதலிய நோய்கள் உண்டாகின்றன. அவன் விழிப்பு நிலையில் பார்க்கும் அதே வஸ்துக்களைக் கனவுகளிலும் அவன் காண்பதால் கனவு நிலையும் விழிப்பு நிலையேதான், உண்மையில்லை, என்று சிலர் கூறுகின்றனர். இஃது அப்படியல்ல ஏனெனில் கனவு நிலையில் புருஷன் சுயம். பிரகாசமான ஒளியாகிறான்."

(இபித் IV 3-14).

"இன்பம் நுகர்ந்து அலைந்து நன்மை தீமையின் பலன்களைக் கனவில் கண்டபிறகு அவன் ஆழ்ந்த தூக்க நிலையில் ஓய்வடைகிறான். அவன் எதிர்முறையில் தனது முந்தைய நிலையாகிய கனவு நிலைக்குத் திரும்பி வருகிறான். அவன் அந்த நிலையில் எதைப்பார்த்தாலும் அதனால் அவன் பாதிக்கப்படுவதில்லை. ஏனெனில் புருஷன் பற்றுதலற்றவன்."

(இபித் IV 3 -15)

" விழிப்பு நிலையில் இன்பம் நுகர்ந்து அலைந்து நன்மை தீமையின் பலன்களான புண்ணியத்தையும் பாவத்தையும் பார்த்தபிறகு அவன் எதிர்முறையில் முந்தைய

நிலைக்கு அதாவது கனவு நிலை அல்லது ஆழ்ந்த தூக்க நிலைக்கு மறுபடி திரும்புகிறான்."

(இபித் IV 3-17)

"ஒரு பெரிய மீன் நதியின் இரு கரைகளுக்கும், இடது கரைக்கும் வலது கரைக்கும் அல்லது கீழ்க் கரைக்கும் மேல் கரைக்கும் மாறி மாறி நீந்திச் செல்வதுபோல், புருஷன் கனவு எல்லைக்கும் நினைவு நிலையின் எல்லைக்கும் ஆகிய இரு எல்லைகளுக்கும் இடையில் மெதுவாகச் சஞ்சரிக்கிறான்."

(இபித் IV 3-18)

"அவனில் ஹிதநாடிகள் என்பவை உள்ளன. அவை மயிரை ஆயிரமாகப் பிளந்ததுபோல் அவ்வளவு மெல்லியவையாயும், வெண்மை, நீலம், மஞ்சள், பச்சை, சிவப்பு ஆகிய ரஸம் நிறைந்தவையாயும் இருக்கின்றன.

ஆகவே ஒரு மனிதன் விழித்திருக்கும்போது பார்க்கிற பயங்கரப் பொருள்களே, கனவில் அவனால் கற்பனை செய்யப்பட்டு யாரோ தன்னைக் கொல்லுவதுபோலும் தன்னைப் பிடித்து அழுத்துவதுபோலும், யானை அவனைத் துரத்த அவன் படுகுழியில் விழுவதுபோலும் காண்கிறான். மறுபடி அவன் "நான் பரமாத்மா. நான் மன்னன் இதெல்லாம் நானே" என்று அவன் உணர்வடைவது போல் தோன்றும்போது அவன் சிறந்த சாந்தியைப் பெற்றுள்ளான்.

கனவு நிலையில் இருக்கும்போது ஜீவாத்மா, சக்ரவர்த்திபோல் ஆகிறான். சிரேஷ்ட பிராமணன் போல் ஆகிறான். அல்லது உயர்ந்த நிலையோ தாழ்ந்த நிலையோ போல் அடைகிறான். ஒரு சக்ரவர்த்தி தன் பரிவாரங்களோடு இஷ்டம் போல் செல்வது போன்று ஆத்மா தனக்குரிய சரீரத்தில் அவயவங்களை எடுத்துக்கொண்டு சஞ்சரிக்கிறான்.

(பிருஹ. உப. அத் II 1.18)

கனவில் கனவு காண்பவன் புண்ணியத்தையோ பாவத்தையோ உள்ளபடி செய்யாததனால், அவன் அவற்றால் எதனாலும் பந்தப்படுவதில்லை; ஏனெனில் நல்வினைகள் அல்லது தீவினைகளும் அவற்றின் பயன்களும் அவற்றிற்குச் சாட்சியாக இருப்பவனுக்குச் சம்மந்தப்படுவதில்லை.

அக்கனவில் இன்பம் நுகர்ந்து, இங்குமங்கும் திரிந்து புண்ணியத்தையும் பாவத்தையும் பார்த்த பிறகு, அவன் மறுபடி எதிர்முறையில் பிறப்பிடத்துக்கு விழிப்பு நிலைக்குச் செல்கிறான். அவன் அங்கு காண்பவற்றால் பிணிக்கப் படுவதில்லை. ஏனெனில் புருஷன் தொடப்படுவதில்லை.

(பிருஹ. உப. அத் IV 3 - 16)

## 18. சுவப்னங்களைப் பற்றி பிரஸ்ன உபநிஷத் கூறுவது

பின்பு சூரியனின் பேரனான கார்க்யன் பிப்பலாதரைக் கேட்டதாவது :

'பகவானே! மனிதனில் தூங்குபவை எவை? அவனில் விழித்திருப்பவை எவை? கனவுகளைக் காணும் தேவன் யாவன்? இந்த ஆனந்தம் யாருடையது? இவை யாவும் எதை ஆதாரமாகக் கொண்டுள்ளன?

பிப்பலாதர் அளித்த பதிலாவது; "ஏ கார்க்யா! அஸ்தமிக்கும் போது சூரியனின் கிரணங்கள் ஒளி வட்டத்தில் ஒன்றாகி, மறுபடி சூரியன் உதிக்கும்போது வெளிவருகின்றனவோ, அதேபோல் இவையனைத்தும் உயர்ந்த தேவனாகிய மனதில் ஒன்றாகின்றன. ஆகவே அச்சமயம் அந்த மனிதன் கேட்பது, பார்ப்பது, முகர்வது, ருசிபார்ப்பது, உணர்வது, பேசுவது, இன்பம் நுகர்வது, மலம் கழிப்பது, அசைவது ஆகிய எதுவும் செய்வதில்லை. அவன் தூங்குகிறான் என்று சொல்லுகிறார்கள்.

தேகமாகிய ரதத்தில் பிராணாக்கினிகள் மாத்திரம் விழித்திருக்கின்றன. அபானன் கபார்ஹபத்ய அக்கினியியானன் அன்வஹார்யாபசன அக்கினி, பிராணன் ஆஹவனிய அக்கினி, ஏனெனில் அது கார்ஹபத்ய அக்கினியினின்று எடுக்கப்படுகிறது.

சமானன் உள்மூச்சு வெளி மூச்சாகிய ஆஹுதிகளைச் சமமாகப் பங்கிடுவதால் அது புரோஹிதன் (ஹோத்ரி) மனதே யக்ரும், உதானன் யக்ருத்தைக் கவனிப்பவன்; அவன் ஒவ்வொரு நாளும் யக்ருங்களை (ஆழ்ந்த தூக்கத்தில் பிரம்மத்துக்கு) நடத்துகிறான்.

இந்த நிலையில், இந்த தேவன் (மனது) தூக்கத்தில் சிறப்பை அனுபவிக்கின்றது. பார்க்கப்பட்டதை அவன் மறுபடி பார்க்கிறான். கேட்கப்பட்டதை மறுபடி கேட்கிறான். வெவ்வேறு தேசங்களிலும் வெவ்வேறு இடங்களிலும் என்ன அனுபவிக்கப்பட்டதோ அதை அவன் மறுபடி அனுபவிக்கிறான். பார்க்கப்பட்டதும் பார்க்கப்படாததும், கேட்கப்பட்டதும் கேட்கப்படாததும், அனுபவிக்கப்பட்டதும் அனுபவிக்கப்படாததும், அவன் யாவற்றையும் காண்கிறான். ஏனெனில் அவன் யாவற்றையும் காண்பவன்.

அவன் ஒளியால் வெல்லப்படும்போது, அப்போது இத்தேவன் (மனது) கனவுகள் காண்பதில்லை. அச்சமயம் இத்தேசத்தில் ஆனந்தம் உதயமாகிறது. பறவைகள் வசிப்பதற்கு மரத்தைச் சார்வதுபோல் இவையாவும் பரமாத்மாவில் சாந்தி அடைகிறது :-

பூமியும் சூக்ஷ்ம பூதங்களும், நீரும் அதன் சூக்ஷ்ம பூதங்களும், அக்கினியும் அதன் சூக்ஷ்ம பூதங்களும், வாயுவும் அதன் சூக்ஷ்ம பூதங்களும், ஆகாசமும் அதன் சூக்ஷ்ம பூதங்களும், கண்ணும் பார்க்கக்கூடியதும், காதும் கேட்கக் கூடியதும், மூக்கும் முகரக்கூடியதும், ருசியும் ருசிக்கக் கூடியதும், தொக்கும் அதன் விஷயங்களும், பேச்சும் அதன் விஷயங்களும், கைகளும் கைப்பற்றக்கூடியவையும்,

கால்களும் நடக்கக்கூடியதும், உற்பத்தி உறுப்பும் அனுபவிக்கக் கூடியதும், வெளியில் கழிக்கும் உறுப்பு வெளியில் தள்ளவேண்டியதும், மனதும் யோசிக்க வேண்டியதும், புத்தியும் தீர்மானிக்கப்படவேண்டியதும், அஹங்காரமும் அதன் விஷயமும், சித்தமும் அதன் விஷயமும், ஜோதியும் அதன் விஷயமும், பிராணனும் அதனால் தாங்கப்படுவதும் ஆகும்.

இவன் பார்ப்பவன், ஸ்பர்ஸிப்பவன், கேட்பவன், முகர்பவன், சுவைப்பவன், யோசிப்பவன், அனுபவிப்பவன் செய்பவன், அறிவே இயல்பான ஜீவன், புருஷன் அவன் சிறந்த அழிவற்ற ஆத்மாவில் உறைகிறான்.

## 19. மாண்டூக்ய உபநிஷத்திலிருந்து கனவைப்பற்றி

இரண்டாவது இடம் தேஜஸன். அவனது க்ஷேத்ரம் அல்லது இடம் கனவு. அவன் உள் வஸ்துக்களை உணருகிறான். அவனுக்கு ஏழு உறுப்புகளும் பத்தொன்பது வாய்களும் உண்டு. அவன் சூக்ஷ்ம விஷயங்களை அனுபவிக்கிறான்.

விழிப்பு நிலையின் அனுபவங்களால் உண்டாக்கப்பட்ட சம்ஸ்காரங்களைக் கொண்டு மனது கனவில் பல்வேறு பொருள்களைப் படைக்கிறது. அவித்யை (அஞ்ஞானம்), காமம் (ஆசை அல்லது கற்பனை), கர்மம் (செயல்) இவற்றின் வேகத்தின் மூலம், மனம் கனவில் நினைவு வாழ்க்கை முழுவதையும் திரும்ப உற்பத்தி செய்கிறது. கனவில் மனதே அறிவது; அதுவே அறியப்படுவது. வெளி விஷயங்களின் உதவியின்றியே மனது பொருள்களைப் படைக்கிறது. அது பல்வேறு விசித்திரமான நம்பத்தகாத கலப்புகளைப் படைக்கிறது. நீ கனவில் உயிருடன் இருக்கும் உன் தந்தை இறந்து விட்டதாயும், நீ ஆகாயத்தில் பறப்பதாயும்

காணக்கூடும். நீ கனவில் யானைத்தலையுடைய சிங்கத்தையும், நாயின் தலையுடன் கூடிய பசுவையும் பார்க்கக்கூடும். விழிப்பு நிலையில் நிறைவு பெறாத விருப்பங்கள் கனவில் நிறைவு அடைகின்றன. கனவு ஒரு மர்மமான அற்புதம். அது விழிப்பு நிலையைவிட ருசிகரமானது.

விழிப்பு நிலையின் வாசனைகளோடு மனது தொடர்பு கொண்டிருப்பதன் மூலம் ஸ்தூல சப்தம் முதலியன இல்லாத போதும் அச்சமயத்துக்குச் சிருஷ்டிக்கப்பட்ட வாசனைகள் வடிவமான சப்தம் முதலிய விஷயங்களை ஆத்மா அல்லது தேஜஸன் அனுபவிக்கும் அந்நிலையே கனவு அல்லது கனவாகும். ஒரு வியாபாரி விழிப்பு நிலையில் உலக விஷயங்களில் ஈடுபட்டு அலுப்படைவது போன்று, ஜீவாத்மா உள்ளே தன் இருப்பிடத்தில் ஓய்வு அடைவதற்கு தேட முயல்கிறது. இந்திரியங்கள் ஓய்வடைந்து, விழிப்பு நிலையில் அனுபவிக்கப்பட்ட வஸ்துக்களின் வாசனைகளுடன் அறிபவனும் அறியப்படும் பொருளும் தோற்றம் அளிக்கும் நிலையே சுவப்னாவஸ்தை. இந்த நிலையில் விஸ்வன் மாத்திரம், விழிப்பு நிலையில் அவனது செயல்கள் நின்று தேஜஸனுடைய (தேஜஸனுடைய, ஜோதிமயமான) நிலையை அடைகிறான். அவன் நாடிகளின் நடுவில் செல்பவனாய், வாசனைகளின் வடிவமான முரண்பாடானதும் சூக்ஷ்மமானதுமான கனவு உலகத்தை இந்த ஒளியினால் பிரகாசப்படுத்திக் கொண்டு தன் இஷ்டம்போல் தான் இன்பம் துய்க்கிறான்.

சூத்திராத்மா அல்லது ஹிரண்யகர்ப்பன் ஈஸ்வரனின் உத்தரவுகளின் கீழ் தனிப்பட்ட சூக்ஷ்ம சரீரத்தில் புகுந்து மனத்தை தன் வாகனமாகக்கொண்டு, தேஜஸ நிலையை அடைகிறான். அப்போது அவன் தேஜஸன், பிரதிபக்ஷன் சுவப்ன கல்விதன் (கனவினால் உண்டாக்கப்பட்டவன்) என்னும் பெயர்களை அடைகிறான்.

கனவு காணும் நிலையில் கனவு காண்பவன் தனக்குச் சொந்தமாக உலகத்தைச் சிருஷ்டித்துக்கொள்கிறான். இந்த நிலையில் மனது தனியாக சுதந்திரமாய் செயலாற்றுகிறது. புலன்கள் மனதிற்குள் இழுத்துக்கொள்ளப்படுகின்றன. புலன்கள் ஓய்வில் இருக்கின்றன. எப்படி ஒரு மனிதன் வெளி உலகத்திலிருந்து விலகிக்கொண்டு தன் அறையின் கதவையும் பலகணிகளையும் மூடிக்கொண்டு தன் அறைக்குள் வேலை செய்கிறானோ, அதேபோல் மனது வெளி உலகத்திலிருந்து விலகிக்கொண்டு கனவு உலகில் வாசனைகளோடும் சம்ஸ்காரங்களோடும் விளையாடிக் கொண்டு ஆசையின் விளைவுகளாகிய நுட்பமான அல்லது சூக்ஷ்மமான எண்ணங்களால் ஆக்கப்பட்ட விஷயங்களை அனுபவிக்கிறது. கனவு என்பது உள்ளத்தின் விளையாட்டு மட்டுமே. மனதே விழிப்பு நிலையின் சம்ஸ்காரங்களின் (வாசனைகள்) சக்தி மூலம் தன் தேகத்திலிருந்தே நுட்பமான பொருள்கள் அநேகத்தைத் தோற்றுவித்து இப்பொருள்களை அனுபவிக்கிறது. ஆகவே தேஜஸ்னால் வாசனைகள் உருவத்தில் தேஜஸனால் சூக்ஷ்ம அனுபவம் இருக்கிறது. ஆனால் விஸ்வனால் விழிப்பு நிலையின் அனுபவம் ஸ்தூலமாயிருக்கிறது.

பிரஹதாரண்ய உபநிஷத் 4-3-9 கூறுவது "விழிப்பு நிலையின் பல்வேறு அனுபவத்தினால் உண்டாக்கப்பட்ட சம்ஸ்காரங்கள் நிறைந்தவனாய் அவன் துயில்கிறான். கனவுகளைக் காண்கிறான். அவன் விழிப்பு நிலையின்போது உண்டான உலக சம்ஸ்காரங்களை உடன்கொண்டு, அவற்றை அழித்து மறுபடி அமைத்துத் தன் சொந்த ஒளியினால் கனவை அனுபவிக்கிறான்" அதர்வண வேதம் கூறுவதாவது "இவை யாவும் உள்ளத்தில் உள்ளன. அவை தேஜஸனால் அனுபவிக்கப்படுகின்றன அல்லது அறியப்படுகின்றன." கனவு நிலையை அனுபவிப்பவன் தேஜஸன் என்று சொல்லப்படுகிறான். ஏனெனில் அவன் முழுதும் ஒளிமயமானவன்.

திரையில் ஓவியங்கள் வரையப்படுவதுபோல், விழிப்பு நிலையின் சம்ஸ்காரங்கள் மனத் திரையில் வரையப்படுகின்றன. திரையின் மீது படங்கள் சமதளத்தில் வரையப்பட்டுள்ள போதிலும்கூட அகலம், பருமன் முதலிய பல்வேறு அளவுகள் உடையனபோல் தோன்றுகின்றன. அதே போல், சுவப்ன அனுபவங்கள் உண்மையில் மனத்தின் நிலைகளேதான் எனினும், கனவுஉலகத்தை அனுபவிப்பவன் உட்புறம் வெளிப்புறம் ஆகியவற்றைக் காண்கிறான். அவன் கனவு காணும்போது கனவு உலகம் முழுதும் உண்மையென்று உணர்ச்சியடைகிறான்.

(பிரவிவக்த : பிர = வேறுபட்ட, விவிக்த = நிலையின் வஸ்துக்களிலிருந்து) விழிப்பு நிலையில் காணப்படும் வஸ்துக்கள் எல்லா ஜீவர்களுக்கும் பொதுவான ஒரு வெளிப்படை உண்மையைக் கொண்டுள்ளன; ஆனால் கனவில் காணும் வஸ்துக்களோ விழிப்பு நிலையில் பெற்ற சம்ஸ்காரங்களில் புனர் உருவமாய் கனவு காண்பவனுக்கு மட்டுமே வெளிப்படை உண்மையாயுள்ளன.

(அந்தப் பிரக்ஞை) = உள்ளுணர்வு; அனுபவிப்பவன் கனவு உலகத்தை மாத்திரமே உணர்கிறான்). விழிப்பு நிலையில் கண்ட விஷயங்களின் (வஸ்துக்களின்) சம்ஸ்காரங்கள் கனவுகளில் வெளித் தோன்றுவது பிரவிக்தம் அல்லது சூக்ஷ்மம். எந்த உணர்வு நிலையில இந்த சூக்ஷ்மப் பொருள்கள் காணப்படுகின்றனவோ அது அந்தப் பிரக்ஞை அல்லது உள்ளுணர்வு. விழிப்பு நிலையின் சம்ஸ்காரங்கள் மனதில் தங்கி, புலன்களின் உதவியின்றிக் கனவில் தோற்றமளிக்கின்றன. மனது புலன்களைவிட அதிக நுட்பமானது. முன்னம் ஏற்பட்ட ஜாக்கிரத அவஸ்தை அல்லது விழிப்பு நிலையினால் சித்தத்தில் தங்கிய சம்ஸ்காரங்களாகிய மனோ நிலைகளை கனவு காண்பவன் உணர்ந்திருக்கிறான். அதனால் அது அந்தப் பிரக்ஞை எனப்படுகிறது.

மனோ நிலையில் அல்லது நுட்பமான நிலையில் ஆத்மாவின் சிறு உலகமாகிய வடிவம் தேஜஸன் எனப்படுகிறான். மனோநிலையில் அல்லது சூக்ஷ்ம அவஸ்தையில் ஆத்மாவின் சர்வ ஜகத்சொரூபமான நிலை ஹிரண்யகர்ப்பன். விழிப்பு நிலையில் விஸ்வனோடு விராட் ஒன்றாயிருப்பதுபோல், கனவு நிலையில் தேஜஸன் ஹிரண்யகர்ப்பனோடு ஒன்றாயிருக்கிறான்.

## 20. சுபோதன் கண்ட கனவின் கதை

இந்திரப்பிரஸ்தம் என்னும் பழமையான தலை நகரத்தில் சுபோதன் ஒரு பிராம்மண குடும்பத்தில் பிறந்தான். அவன் தூய வாழ்க்கை நடத்தி வந்தான். கல்வியறிவில் யாருக்கும் சளைத்தவனல்லன். அவன் தெய்வ பக்தியும் கருணையுமே உருவமானவன். விரும்பத்தக்க ஒவ்வொரு நற்குணமும் அவனிடம் குடிகொண்டிருந்தது. அவன் மிகவும் தர்மகுணமுள்ளவனாயும் பக்திமானாகவும் இருந்தான். அவன் ஒரு தெய்வீக வடிவினன். பூமியில் வசிக்கும் தேவன். அவன் பூரண பிரம்மச்சாரி.

ஒருநாள் சுபோதன் ஆனந்தமாக ஸ்நானம் செய்து அறுசுவை உணவு உண்டான். அப்பொழுது நடுப்பகல் மிகவும் புழுக்கமாயிருந்தது. அவன் களைப்படைந்து தனது தாழ்ந்த சயனத்தில் சிறிதே சாய்ந்தான். அவன் உறங்கிப்போய் கனவு நிலையை அடைந்தான். தன் கனவில் அவன் காசிராஜனின் குமாரனானான். அவனுக்குப் பன்னிரண்டு வயதாயிற்று. அவனுடைய தந்தையான காசிராஜன் இளவரசனுக்கேற்ற வித்தைகள் அனைத்தும் கற்பித்தான். இளவரசனுக்கு பிரயதர்சி என்று பெயர் இடப்பட்டது. பிரியதர்சி வில்வித்தை முதலிய சகல கலைகளையும் கற்றுத் தேர்ந்தான். காலக்கிரமத்தில் காசிராஜன் தன் மகனுக்கு மணம் செய்வித்து

சிம்மாசனத்தில் அமர்த்தி ஓய்வடைந்தான். பிரியதர்சி நாட்டை நீதியோடும் அறிவோடும் ஆண்டுவந்தான்.

ஒருநாள் பிரயதர்சி ராஜன் பரிவாரங்களுடன் வேட்டைக்குச் சென்றான். அவனுக்கு நல்ல வேட்டை கிடைத்தது. அவன் களைப்படைந்தான். அவனுடைய பரிவாரங்கள் பின்தங்கிவிட்டன. அவன் அவர்களைவிட்டு வெகுதூரம் வந்துவிட்டான். தன் குதிரையை ஒரு மரத்தில் கட்டிவிட்டு ஒரு குடிசையை அடைந்து பருக நீர் கேட்டான். அப்ஸரஸ் போன்ற ஒரு அழகுள்ள நங்கை அவன் அருந்த நீர் கொணர்ந்தாள். அக்கட்டழகி அரசன் மனத்தைக் கவர்ந்தாள். அவளை மணம்புரிய விரும்பினான் மன்னன். மங்கையின் தந்தை அவன் தன் ஆஸ்தியில் பாதியை அளித்துத் தங்களோடு தங்குவதானால் மணம் செய்து கொடுக்க இசைந்தான். அரசன் சம்மதித்தான்.

தனது புது மணம் புரிந்த மனைவியுடன் அரசன் நாடு திரும்பினான். அவள் இழிவான குணம் படைத்தவள். யாவரையும் குரூரமாக நடத்தினாள். அரசன் பழக்கப்படாத கெட்ட வழிகளை அவனுக்குக் கற்பிக்க, அவன் இழிந்த வாழ்க்கை நடத்தலானான். நாட்டில் யாவராலும் வெறுக்கப்பட்டான். ஜனங்களின் நன்மையைக் கருதாமல் விட்டதால் யாவரும் பகைத்தனர். அல்லும் பகலும் அவன் அக்கெட்ட ராணியுடன் சேர்ந்திருந்தான். அப்புது மனைவியால் அவனுக்குப் பல புதல்வரும் புதல்வியரும் பிறந்தனர். அவளோடு அவன் கேவலமான வாழ்க்கையை நடத்திவந்தான்.

ஒருநாள் உண்டு குடித்துச் சிற்றின்பங்களைக் கழித்த பிறகு இரவு ஆனதும் படுக்கச்சென்றான். படுக்கையில் படுத்தவுடன் அயர்ந்த தூக்கத்தில் ஆழ்ந்தான். பிரியதர்சி மன்னன் கனவில் தனக்கு மரணம் நேர்ந்தது போலும் மனிதர்கள் தனது சடலத்தைத் தூக்கிச் செல்வது போலும் கண்டான். பிறகு ஒரு வைசியனின் வீட்டில் தான்

மறுபிறப்பு எடுத்திருப்பதாகக் கனவுகண்டான். அந்த வைசியன் ஒரு சாராய வியாபாரி. அவனும் அதே தொழிலைக் கைக்கொண்டு ஆயுள் பூராவும் சாராயம் விற்பவனாகவே இருந்தான். ஒருநாள் அவன் அதிகமாக குடித்துவிட்டு குடிமயக்கத்தில் ஆழ்ந்திருந்தான். அந்நிலையில் அவன் உஸினாரா தேசத்தில் ஒரு சூத்திரனாகப் பிறக்கக் கனவு கண்டான். அவன் உஸினாரா நாட்டு மன்னனிடம் குதிரைப்பாகனாக இருந்தான். வாழ்க்கை முழுவதையும் குதிரைகளைப் பராமரிப்பதிலேயே கழித்தான். ஓரிரவு அவன் சண்டாளனாகப் பிறந்து அப்படியே வாழ்க்கை நடத்துவதாகக் கனவு கண்டான். ஒருநாள் அவன் காட்டில் கள்ளி பொறுக்கப்போனான். அவனை ஒரு புலி தாக்கியது. அவன் வீறிட்டு விழித்து தான் மறுபடி படுக்கையில் சாய்ந்த கபோதன் என்னும் பிராம்மணனே என்று கண்டான்.

கபோதன் தெளிவாகவும் விவரமாகவும் பிரியதர்சனிராஜன், வைசிய குமாரன், சூத்திரன், சண்டாளன் ஆகிய தனது வெவ்வேறு வாழ்க்கைகளையும் கண்டான். அவன் அநேக வாழ்க்கைளை அடைந்தான். இவை யாவற்றையும் அவன் ஒரே ஒரு கனவில் அனுபவித்தான்.

மனிதனே! நீ கபோதனைப் போல்தான். புலிதாக்கிய போது கபோதன் கூச்சலிட்டதுபோல் நீயும் இப்போது உன்னுடைய இப்போதைய வாழ்க்கையின் துன்பமான மரண வேதனையில் இருக்கிறாய். நீ யாண்டும் தன்னலம், கோணல்வழி, சண்டைகள், கஷ்டங்கள் இவற்றையே காண்கிறாய். உண்ண உணவு இல்லை, மனச்சாந்தியில்லை. நீ மாயை, தமஸ் இவற்றின் வலையில் சிக்கிக் கொண்டிருக்கிறாய். நீ சோம்பேறியாயும் உறக்கமாயும் இருக்கிறாய். சில சமயங்களில் வாழ்க்கை உனக்குச் சலித்து விடுகிறது. உனது சொந்த வாழ்க்கையிலும் வெளி வாழ்க்கையிலும் கடுந்துன்பத்தில் நீ இடரும்போது சில வேளைகளில் தற்கொலை செய்துகொள்ளக்கூட

நினைக்கிறாய். உன்னுடைய வாழ்க்கையின் இலட்சியங்கள் முறிந்து விடுகின்றன. நீ கெட்ட சகவாசத்தில் விழுகிறாய். உனது வாழ்க்கையையும் இளமையையும் பாழாக்கிக் கொள்கிறாய். உனக்கு முடிவற்ற ஆசைகள் இருக்கின்றன.

நண்பா, "ஆழ்ந்த அக்ஞானமும் துன்பமும் நிறைந்த இந்த நிலையிலேயே நீ எத்தனை நாள் இருக்க விரும்புகிறாய்?" வெளிப்படையாய்க் கூறு. விழித்துக்கொள் இடுப்புத் துணியை இழுத்துக் கட்டு. யோகியாகு. நீ இந்த ஸ்தூல தேகமல்ல. உனக்கும் துன்பத்துக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இந்த உறக்கத்தை உதறித்தள்ளு. உன் கண்களைத் திறந்து பார். நீண்ட நித்திரை போதும் விழித்துக்கொள். மெய்ப்பொருளைக் காண விழித்துக் கொள்! இப்போது சிறந்த வருங்காலத்தின் உதயமான பிரம்ம முகூர்த்தம்! தூங்காதே. உன்னுள் இருக்கும் உண்மையான ஆவியோடு உன்னை ஒன்றுபடுத்திக்கொள். நீ வேதனையினாலும் துன்பத்தினாலும் இனி துன்பப்படமாட்டாய்.

யோக ஏணியின் மேல் ஏறு. புராதன மகான்கள் ஞானிகள் இவர்களின் அறிவுரைகளைக் கடைப்பிடி. நாம ஸ்மரணத்தை அப்பியசி. வீண் பெருமையை விட்டு விடு. அடக்கமாயும் எளிமையாகவும் இரு. தூய்மை, நற்குணம் பெருந்தன்மை ஆகிய குணங்களைக்கொண்ட வாழ்க்கையைக் கைக்கொள். நீ ஊக்கம் நிறைந்த யோகியாய்ப் பிரகாசிப்பாய்!

நீ உலக முழுவதற்கும் ஒளி மகிழ்ச்சி, அமைதி இவற்றைக் கொண்டு வருவாயாக! நீ அமரனாகத் திகழ்வாயாக!

## 21. ஜனகராஜனின் கனவு

ஜனகராஜன் விதேக நாட்டை ஆண்டு வந்தான். அவன் ஒருநாள் சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்தான்.

கடுங்கோடையான வைகாசி மாதத்தில் நடுப்பகல். அவன் சில விநாடிகள் சிறிது உறக்கம் கொண்டான். ஒரு எதிரி அரசன் பெரும்படையுடன் தன் நாட்டைத் தாக்கித் தன் வீரர்களையும் அமைச்சர்களையும் கொன்று விட்டதாகக் கனவு கண்டான். அவன் உடைகளின்றி வெறுங்காலோடு அரண்மனையினின்று துரத்தப்பட்டான்.

பிறகு ஜனகன் தான் ஒரு காட்டில் அலைவதாகக் கண்டான். அவனுக்குப் பசியும் தாகமும் மேலிட்டன. அவன் ஒரு சிறு நகரத்தை அடைந்து உணவுப் பிச்சை வேண்டினான். அவனுடைய கெஞ்சுதலை ஒருவரும் செவிசாய்க்கவில்லை. அவன் ஓரிடத்தில் பிச்சைக்காரர்களுக்குச் சிலர் உணவு அளிப்பதைக் கண்டு அங்கு சென்றான். ஒவ்வொரு பிச்சைக்காரனிடமும் அரிசிக் கஞ்சியை வாங்கிக் கொள்வதற்கு ஒரு மண் கப்பரை இருந்தது. ஜனகனிடம் கப்பரையில்லாததனால் அவனைக் கப்பரை கொண்டு வரும்படி அனுப்பிவிட்டார்கள். அவன் ஒரு பாத்திரத்தைத் தேடிச் சென்றான். தனக்கு ஒரு கப்பரை இரவல் தரும்படி மற்றப் பிச்சைக்காரர்களை வேண்டினான்; ஆனால் ஒருவரும் தன் கப்பரையை அளிக்க இசையவில்லை. கடைசியில் ஜனகனுக்கு ஒரு உடைந்த கப்பரை கிடைத்தது. உடனே அதை எடுத்துக்கொண்டு கஞ்சி கொடுக்கும் இடத்துக்கு ஓடினான். அதற்குள் உணவுப் பங்கீடு முடிந்து விட்டது.

நீண்ட பிரயாணத்தினாலும், பசி தாகத்தாலும் கோடைகால வெப்பத்தாலும் ஜனகன் பெரிதும் களைப்படைந்தான். உணவு சமைக்கப்படும் அடுப்புக்கருகில் அவன் படுத்துக் கிடந்தான். ஈண்டு யாரோ ஒருவன் ஜனகனிடம் இரக்கம் கொண்டு பாத்திரத்தின் அடியில் இருந்த சோற்றுக் கஞ்சியைக் கொடுத்தான். ஜனகன் மகிழ்ச்சியோடு அதை வாங்கிக் கொண்டு வாயில் வைத்துக் கொள்ளும்போது, இரு எருதுகள் சண்டை போட்டுக்கொண்டு அவன் மீது வீழ்ந்தன. கப்பரை துண்டு

துண்டாய்ச் சிதறியது. அரசன் பயத்தோடு விழித்துக் கொண்டான்.

ஜனகன் வெட வெடவென்று நடுங்கினான். அவனுடைய இருநிலைகளில் எது உண்மையானது என்று தீர்மானிக்க முடியாமல் இருதலைக்கொள்ளி எறும்புபோல் தயங்கினான். அவன் கனவு கண்ட சமயம் பூராவும், அது பிரமை, பசி, தாகம் முதலிய துன்பங்கள் யாவும் உண்மையற்றவை என்று எண்ணவேயில்லை.

அரசி ஜனகனை "நாதா! உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டாள். "இதுவா, அதுவா எது உண்மை!" என்று வார்த்தைகளை மட்டுமே ஜனகன் பேசினான். அதுமுதல் அவன் தன் வேலைகள் அனைத்தையும் விட்டு விட்டு மௌனமானான். அந்த சொற்களைத் தவிர வேறொன்றையும் பேசுவதுமில்லை.

மந்திரிமார்கள் ஜனகனுக்கு ஏதோ நோய் வந்திருக்கிறது என்று எண்ணினார்கள். "அரசனின் நோய் நீக்குபவன் தகுந்த பரிசு பெறுவான். தவறுபவர்கள் ஆயுள் கைதிகளாவார்கள்" என்று அவர்கள் பறையறைவித்தார்கள். பெரிய பெரிய வைத்தியர்களும் நிபுணர்களும் வந்து முயன்றார்கள். ஆனால் யாராலும் அரசனது கேள்விக்கு விடைகூற முடியவில்லை. வியாதிகளைத் தீர்ப்பதில் வல்லவர்களான நூற்றுக்கணக்கான வைத்தியர்கள் அரசியல் கைதிகளாய் சிறையில் வசித்தார்கள்.

அக் கைதிகளில் சிறந்த ஞானியான அஷ்டவக்கிரரின் தந்தையும் ஒருவர். அஷ்டவக்ரர் பத்தே வயதுப் பையனாயிருந்த போது அவன் தாய் "ஜனகராஜனின் நோயை நீக்க முடியாததினால் உன்னுடைய தந்தை அரசியல் கைதியாயுள்ளார்" என்று அவரிடம் கூறினாள். உடனே அவர் ஜனகனைக் காணப் புறப்பட்டார். அவர் அரசனது கேள்விக்கு அக் கேள்வியைப் போன்றே "சுருக்கமாகப் பதில் கொடுத்தால் போதுமா அல்லது

அவனது கனவு அனுபவம் முழுவதையும் விவரமாகக் கூறவேண்டுமா" என்று அரசனைக் கேட்டார். பெரிய கூட்டத்தில் தனது அவமானகரமான கனவை வெளிப்படுத்திக் கொள்வதில் ஜனகனுக்கு விருப்பமில்லை. அவன் சுருக்கமான பதிலைப் பெற இணங்கினான்.

அஷ்டவக்ரர் ஜனகனது காதோடு "இதுவும் உண்மையல்ல அதுவும் உண்மையல்ல" என்று இரகசிய மாகக் கூறினார். ஜனகன் உடனே மகிழ்வடைந்தான். அவனுடைய குழப்பம் நீங்கியது.

ஜனகராஜன் பிறகு அஷ்டவக்ரரை "எது உண்மையானது?" என்று கேட்டான். அதன் மேல் அவனுக்கும் அந்த முனிவருக்கும் நீண்ட சம்பாஷணை நிகழ்ந்தது. இதுவே பிரசித்தி பெற்ற அஷ்டாவக்ர கீதையாகும். அது மெய்ப்பொருளைக் காண விழையும் சாதகர்கள் யாவருக்கும் பெரிதும் பயனுள்ளது.

## 22. கனவுகளைப் பற்றி கௌட பாதாசார்யர் கூற்று

அறிவாளிகள், கனவில் காணப்படும் ஒவ்வொரு பொருளும் உண்மையற்றது என்று பறைசாற்றியிருக் கிறார்கள். ஏனெனில் கனவின் வஸ்துக்கள் யாவும் தேகத்துக்குள்ளேயே மிகக் குறைந்த பரப்பில் இருப்புள்ளவை.

மலைகள், யானைகள் முதலிய யாவும் கனவில் சரீரத்துக்குள்தான் காணப்படுகின்றன. ஆகவே அவை உண்மையாயிருக்க முடியாது.

காலத்தின் குறைவைப் பார்த்தால், கனவு காண்பவன் சரீரத்தை விட்டு வெளிச்சென்று கனவு வஸ்துக்களைக் காண்பது சாத்தியமல்ல. கனவு காண்பவன் விழித்துக்

கொள்ளும்போது கனவு கண்ட இடத்தில் தான் இருப்பதில்லை. கனவில் காண்பது யாவும் குறுகிய பரப்பில் இருக்க முடியும் என்பது உண்மையல்ல. கிழக்கில் தூங்கும் ஒருவன் அடிக்கடி வடக்கில் கனவுகளைக் காண்பது போன்ற உணர்ச்சியடைகிறான். ஒருவன் தூங்கச் சென்றவுடன் அவன் தன் சரீரத்தினின்று நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பால் உள்ள வஸ்துக்களைப்பற்றிக் கனவு காணத் தொடங்குகிறான். விழிப்பு நிலையில் அவ்விடத்துக்குச் செல்ல ஒரு மாதம் பிடிக்கும். அவன் அவ்வளவுதூரம் போய் அரைநாளில் (ஓரிரவில்) தன் தேகத்துக்குத் திரும்பி வருவது உண்மையல்ல. ஆகவே அவன் தேகத்தை விட்டுச் செல்கிறான் என்பது உண்மையல்ல. அவன் ஓரிடத்தைப் பற்றிக் கனவு கண்டு இன்னொரு இடத்தில் அதாவது முன் நாள் தூங்கச் சென்ற இடத்தில் விழித்துக் கொள்கிறான்.

ஒருவன் இரவில் தூங்கச் சென்றாலும் நடுப் பகலில் பல பொருள்களைப் பார்ப்பது போலும் பலரைச் சந்திப்பது போலும் உணர்ச்சி கொள்கிறான். ஆனால் இந்தச் சந்திப்பு பொய் என்று கண்டுணரப்படுகிறது. ஆகவே கனவு பொய்.

"இரதங்கள் முதலிய இல்லை"என்று கூறுவதன் மூலம் சுருதி சுவப்ன நிலையின் மாயீகத்தைப் பறை சாற்றுகிறது. இக்கூற்று தர்க்கரீதியை அடிப்படையாகக் கொண்டது.

தவிர கனவில் காணப்படும் வெவ்வேறு பொருள்கள் இருப்பனவாகக் காணப்பட்டாலும் உண்மையற்றவையே. இதே காரணத்தால் ஜாக்கிரதநிலை வஸ்துக்களும் மாயீகமே. நினைவு நிலை சுனவு நிலைப் பொருள்களின் இயல்பு வெவ்வேறானதல்ல. பொருள்களைப் பற்றிய பரப்பின் வரையறையொன்றுதான் இருநிலைகளிலும் வேற்றுமை. இரு நிலைகளிலும் பார்க்கப்படுவது என்பது பொதுவாக மாயீகமே.

மேலும் இரு நிலைகளிலும் காணப்படும் வஸ்துக்கள் ஒரே மாதிரியானமையின் விழிப்பு நிலையும் கனவு நிலையும் ஒன்றே. ஆரம்பத்திலும் முடிவிலும் இருப்பில் லாதவை இடையிலும் அவசியம் இருப்பில்லாதவையே. ஆத்மாவின் உண்மையை நமது அக்ஞானம் காரணமாக அறியாததால், நாம் பார்க்கும் பொருள்களை உண்மை என்று கருதினாலும் இவ்வாறு அவை பிரமையே.

விழிப்பு நிலையில் சில காரியங்களுக்கு உதவியாக உபயோகிக்கும் வஸ்துக்கள் கனவு நிலையில் மாறாக இருக்கின்றன. விழிப்பு நிலையில் ஒரு மனிதன், உணவு உண்டு நீர் பருகி பசி தணிந்து தாகமின்றி இருக்கிறான். ஆனால் அவன் நித்திரைக்குச் செல்லும்போது, கனவில் நாட்கணக்காக உணவின்றி இருந்தவன்போல் பசிதாகத்தால் வருந்தக் காண்கிறான். இதற்கு எதிரிடையாக சம்பவிப்பது உண்டு. அது உண்மையென்றும் காணப் படுகிறது. கனவில் நன்றாக உண்டு பருகிப் பசிதணிந்தவன் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டவுடன் பசிதாகத்தினால் வாடுகிறான். ஆகவே ஜாக்கிரத நிலை இரண்டிலும் காணும் வஸ்துக்கள் பிரமைதான் என்பதை நாம் ஸ்தாபிக்கிறோம்.

கனவில் காணும் பொருள்கள் யாவும் வழக்கமாக விழிப்பு நிலையில் பார்க்கக்கூடியவை. விழிப்பு நிலையில் பார்க்கப்படாதவை இருப்படையக் காரணம் அச்சமயம் மனது செயல்புரியும் நிலைகள் அல்லது சந்தர்ப்பங்களே. சுவர்க்கத்தில் இருக்கும் இந்திரனுக்கு ஆயிரங்கண்கள் உண்டு. அவர்கள் சுவர்க்கத்தில் வசிப்பதன் காரணத்தால் கனவு போல், கனவு நிலையின் விசித்திர நிலைகளின் காரணமாகக் கனவு காண்பவனின் அசாதாரண விசித்திர உருவங்கள் உள்ளன. இந்த வஸ்துக்கள் அனைத்தும் அவனது சொந்தமனதின் கற்பனைகள் மட்டுமே. அது விழிப்பு நிலையில் ஒரு மனிதன் வேறு தேசத்துக்குப் போகும்போது அவ்விடத்திய வஸ்துக்களைப் பார்ப்பது போலாகும். பழுதையில் பாம்பும் பாலைவனத்தில் கானல்

நீரும் எப்படி உண்மையற்றவையாயும், மனதின் கற்பனையாயும் உளவோ, அப்படியே கனவு நினைவு அனுபவத்தில் காணும் வஸ்துக்களும் உள.

கனவு நிலையில்கூட உள்ளுக்குள் உணரப்பட்ட மன மாறுதல்களை 'அவை மாயீகமானவை' என்பர். ஏனெனில் அந்த உள் வஸ்துக்கள் அவை பார்க்கப் பட்டவுடன் மறைந்துவிடுகின்றன. வெளியில் பார்க்கப்படும் பொருள்கள் உண்மையாகக் கருதப்படுகின்றன. இதே போல் விழிப்பு நிலையில் உண்மையாகக் கருதப்படும் மனோ கற்பனைகள் உண்மையில்லாதவைகளாகக் கருதப்பட வேண்டும். வெளி வஸ்துக்கள் உள் வஸ்துக்கள் இரண்டும் கனவு நிலையிலும் சரி நினைவு நிலையிலும் சரி மனதின் சிருஷ்டி மாத்திரமே.

## 28. கனவுகளைப் பற்றி நிம்பர்காசாரியர்

சில கனவுகள் வரப்போகும் நன்மை தீமைகளைத் தெரிவிப்பனவாதலால் தனி மனிதன் தன் இச்சைப்படி நல்ல கனவையோ கெட்ட கனவையோ காண்பது சாத்தியமல்ல. ஏனெனில் அவன் எதிர்காலத்தை அறிய முடியாமல் தற்காலத்தில் பந்த நிலையில் இருக்கிறான். முக்தி நிலையின் ஜீவாத்மா கனவுகளில் தோற்றத்தை உண்டாக்கு வதற்குத் தன் இச்சாசக்தியை நிச்சயமாய்ப் பிரயோகிக்கக் கூடும். ஆனால் பந்த நிலையில் அச்சக்தி பரமாத்மாவின் பலமான இச்சாசக்தியால் மறைக்கப்பட்டுள்ளது. அவர் அவனுடைய முன் நடத்தையின் நன்மை தீமைகளுக்குத் தக்கபடி அவனுடைய செயல்களை நடத்தி வைக்கிறார். அவன் தேகத்தில் அடைப்பட்டிருப்பதால் அவனது சக்தி மறைக்கப்பட்டிருக்கிறது.

கனவுகளில் சிருஷ்டி முழுதும் பரமாத்மாவின் காரியமே. அது விசித்திரமாயும் மாயீகமாயும் இருப்பதோடு முழுதும் உண்மையற்றதாயினும் முழுதும் பொய்யென முடியாததாயும் உள்ளதால் அது ஜீவாத்மாவால் செய்யப்பட முடியாது.

ஏனெனில் தற்போதைய பந்த நிலையில் படைக்கும் சக்தி உள்பட அவனுடைய முக்கிய குணங்கள் இன்னும் உணரப்படவில்லை. அவன் அடங்கிய நிலையில் இருப்பதால், அவனுடைய உடன்பிறந்த சக்திகள் பூராவாக செயல்பட முடியா. ஆகவே கனவின் அதிசய வஸ்துக்களைப் படைப்பது அவனுக்குச் சாத்தியமல்ல.

ஆதலால் பரமாத்மாதான் கனவுகளை உண்டாக்குபவர், ஜீவாத்மா அல்ல; ஏனெனில் தன் கனவுகளை உருவாக்க அவனுக்குச் சாத்தியமானால், அவன் ஒருக்காலும் கெட்ட கனவுகளைக் காணமாட்டான். எப்போதும் நன்மை விளைவிக்கும் கனவுகளையே காண்பான்.

## 24. சுவாங்ட்ஜீயின் கனவு

சீன தத்துவ சாஸ்திரியான சுவாங்ட்ஜீ, ஒரு சமயம் தான் வண்ணத்துப் பூச்சியானதாய்க் கனவு கண்டார். விழித்தபோது, அவர் தமக்குள் "இப்போது நான் வண்ணத்துப் பூச்சியென்று கனவு காணும் மனிதனா, அல்லது வண்ணத்துப் பூச்சியே மனிதன் என்று எண்ணிக் கொள்கிறேனா?" என்று கூறிக்கொண்டார்.

ஓரிரவு சுவாங்ட்ஜீ படுக்கையில் படுத்திருக்கும்போது தான் வண்ணத்துப் பூச்சியாயிருப்பதாய்க் கனவு கண்டார். பிறகு விழித்துக்கொண்டு அவர் கூறிக்கொண்டதாவது, இந்தப் புதிரை நான் விடுவிக்க இப்போது முயல்வேன்; நான் மனிதனா என்றும் பலகாலும் வியப்புறுகிறேன் அல்லது வண்ணத்துப் பூச்சிதான் சுவாங் என்று எண்ணுகிறதா!

# 25. கனவைப் பற்றிக் குறிப்புகள்

## I

சுவப்னங்களும் சாவும் எல்லாத் தத்துவ ஞானத்துக்கும் பலமான அடிப்படை சுவப்ன உலகம் ஜாக்கிரத உலகத்தினின்று முற்றிலும் வேறுபட்டது. ஆனால் சில விஷயங்கள் வியக்கத்தக்க முறையில் இரண்டுக்கும் பொதுவாயிருக்கின்றன. (1) சில சமயங்களில் ஒரு கனவுக்குள் இன்னொரு கனவு காண்கிறோம். (2) தூங்கும்போது, சில சமயங்களில் நாம் தூங்குவதாயும் கனவு காண்பதாயும் உணர்கிறோம். (3) கனவுகளில் அடிக்கடி கனவு உலகத்துக்கு எஜமானனான ஒரு தேகத்தை அடைகிறோம். (4) சில சமயங்களில் கனவு விஷயங்களுக்கிடையில் நாம் மிகுந்த உதவியற்ற நிலையை அடைந்து, நமது தேகக்கூறு பாதிக்கப்படும்படி கூச்சலிட்டுக் கதறுகிறோம். பொதுவான அனுபவங்களாகிய இவ்விஷயங்களினின்று சில முடிவுகளைக் கொள்வோம். (அ) விழித்திருக்கும் கர்த்தாக்கள் போலவே உணர்வது, நினைவுவைப்பது, ஊக்கம்கொள்வது ஆகிய விவகாரங்கள், கனவுக் கர்த்தாவுக்கும் உரியனவாயுள்ளன. (ஆ) பௌதிக சாஸ்திர விதிகளின்படி ஸ்தூல உலகில் செயலாற்றுவது போலவே, கனவு உலகிலும் அவ்விதிகளின்படி நியதி செயல்புரிகிறது என்பது கனவு உலக விஷயங்களைக் கவனிக்குமிடத்துக் கருத்தில் வைத்தல் வேண்டும். இரு உலகங்களின் சட்டமும் பெரிதும் வேறுபடுவதால், நியதியின் செயல் முறைப் பயன்களும் அவசியம் வேறுபடுகின்றன. உதாரணம் ; கனவில் கடலைக்கடப்பதற்குத் தன் தேகத்தைக் கொண்டே பறக்கும்படி நியதி உதவுகிறது; அது ஒரு போதும் அம்முறையை ஸ்தூல உலகத்தில் கூறாது. அப்படிப்பட்ட யோசனை விழிப்பு உலகத்தில் கற்பனை ராஜ்யத்துக்குத் தான் உரியதாகும் (இ) கனவு வியக்திக்குக்கூட உள்பார்வை

கொண்டுவருகிறது (ஈ) கனவு வியக்திக்கும் மனோமயமான விழிப்பு நிலை ஆத்மாவுக்கும் இடையில் ஒரு வகையான பரஸ்பர வினையுள்ளது. அது தேக அமைப்பைப் பாதிக்கிறது. கடைசியாக (உ) மேற்கூறிய பரஸ்பர வின்னையைப் பற்றி அந்தப் பரஸ்பர வினை சாத்தியமாகச் செய்வது மனோவஸ்துதான் என்பது கவனிக்கப்பட வேண்டும். இவை யாவும் ஒப்புக்கொள்ளப்படும்.

இரு உலகங்களின் விஷயங்கள் பெரிதும் ஒத்திருப்பினும் மனோவஸ்துவாகிய நிமித்தத்தின் மூலமாயன்றி அவற்றிற்குத் தொடர்ச்சி ரேகை இல்லை. இவ்வாறு நாம் வெவ்வேறு உலகங்களின் உண்மைகளைப் பற்றி எவ்வளவு அதிகமாக அறிந்தாலும், பொதுவான தொடர்ச்சிப் பொருளை அதாவது மனோவஸ்துவை நாம் கண்டுபிடித்தாலொழிய இரு உலகங்களுக்கும் தொடர்ச்சியில்லாமல்தான் இருக்கும்.

II

நீ கனவு காணும் போது ஒரு மணி நேரத்தில் ஐம்பது ஆண்டுச் செய்திகளைக் காண்கிறாய். நீ உள்ளபடி ஐம்பது ஆண்டுகள் கழிவதாக உணர்கிறாய். ஜாக்கிரதப் பிரக்ஞையின் ஒரு மணி நேரமா, கவப்னப் பிரக்ஞையின் ஐம்பது ஆண்டுகளா, எது சரி? இரண்டும் சரியே. விழிப்பு நிலையும் கனவு நிலையும் இயற்கையின் ஒரே குணமுள்ளவை. அவை சமமான விழிப்பு நிலை. ஒரு நீண்ட கனவு அல்லது தீர்க்கஸ்வப்னம் என்பது ஒன்றே வேறுபாடு.

கனவில் உனது காரண சரீரத்தில் படிந்திருக்கும் முன் பிறப்புகளின் சம்ஸ்காரங்கள் உருக்கொண்டு கனவும் படங்களாகின்றன.

III

விழிப்பு நிலையில் மனது வெளிசம்ஸ்காரங்களை ஆதாரமாகக் கொள்கிறது. கனவு நிலையில் அதுவே சம்ஸ்காரங்களை உண்டாக்கி அவற்றை அனுபவிக்கிறது. விழிப்பு நிலைக்கும் கனவு நிலைக்கும் வேறுபாடு

இதில்தான் உள்ளது. மனது விழிப்பு நிலையின் வஸ்துக்களைத் தான் பயன்படுத்திக்கொள்கிறது. ஜாக்கிரதம் நீண்ட கனவு மாத்திரமே (தீர்க்கஸ்வப்னம்)

மனோராஜ்யம் (ஆகாயக் கோட்டை கட்டுதல்) கனவுச் சம்பவங்களையும் வஸ்துக்களையும் நினைவு கூறாது. விழிப்பு நிலையில் சென்ற காலத்து நிகழ்ச்சிகளை நினைவு கூறுவது ஆகிய யாவும் சுவப்ன ஜாக்கிரதமாகும். (விழிப்பு நிலையில் கனவு காண்பது)

ஹிதநாடி என்பது இருதயத்திலிருந்து கிளம்பி இருதயத்தைச் சுற்றியுள்ள பெரிய திரையைச் சுற்றியிருக்கிறது. அது ஒரு மயிரை ஆயிரமாகப் பிளந்ததுபோல் அவ்வளவு நுண்ணியதாய், வெண்மை, கருமை, சிவப்பு, மஞ்சள் முதலிய பல்வேறு வர்ணங்களின் சூக்ஷ்மமான சாரம், நிறைந்ததாயுள்ளது. இந்த ஹித நாடியில் மனது பிரவேசிக்கும்போது ஜீவாத்மா கனவு நிலையை (சுவப்ன அவஸ்தை) அனுபவிக்கிறது.

நீ அரசனாயிருப்பதாய்க் கனவு கண்டு பற்பல இராஜசுகங்களை அனுபவிக்கிறாய். நீ விழித்தவுடன் யாவும் மறைந்துவிடுகின்றன. ஆனால் நீ அதற்காக வருந்து வதில்லை. ஏனெனில் கனவு சிருஷ்டிகள் அனைத்தும் பொய்யென்று உனக்குத் தெரியும். விழிப்பு உணர்வு காலத் திலும் நீ உலகமே மாயத் தோற்றம் என்ற எண்ணத்தில் நிச்சயம் கொண்டாயாயின் நீ யாதொரு துன்பத்தையும் அடையமாட்டாய்.

நீ உண்மைத் தத்துவத்தை (பிரம்மத்தை) உணரும் போது விழிப்புப் பிரக்ஞைகூட கனவைப் போலவே முற்றிலும் பொய்யாகிவிடும். குழந்தாய்! விழித்துக் கொள் பிரம்மத்தை அறி.

மனித இயல்பில் வேற்றுமை உள்ளது. சிலர் கனவு காண்பது அருமை. ஆத்ம ஞானம் அடைந்த ஞானிக்குக் கனவுகள் தோன்றா.

கனவின் போது நீ திவ்விய தேஜோமயமான பிரகாசத்தைக் காண்கிறாய். அது எங்கிருந்து வருகிறது? ஆத்மாவிடமிருந்து கனவில் உண்டாகும் வெளிச்சம் ஆத்மா சுயம் ஜோதி (சுயம் பிரகாசம்) என்று தெளிவாகக் காட்டுகிறது.

வெளி வஸ்துக்கள் விட்டுச் சென்ற சம்ஸ்காரங்களால் மாறுபடும்போது, ஜீவாத்மா கனவுகளைக் காண்கிறது.

கனவு நிலையில் புலன்கள் அடங்கி மனதில் இணைந்து விடுகின்றன. மனம் மாத்திரம் சுயேச்சையாகத் தடைகளின்றி செயலாற்றுகிறது. மனம்தானே தேனீ, மலர், மலை, யானை, குதிரை, நதி முதலிய வெவ்வேறு உருவகங்களைக் கொள்கிறது. காண்பவனும் காணப்படும் பொருளும் நன்றே.

## 26. கனவு அறிகுறிகளும் அவற்றின் அர்த்தமும்

அசௌக்கியம் : நீ அசௌக்கியமாக இருப்பதாகக் கனவு கண்டால் நீ ஏதோ தீச்செயலுக்கு ஆளாவாய் என்பதாம். அதைத் தடுத்துக் கொள்ளாவிட்டால் உன் பெயர் கெடும்.

அரக்கன் : பெரிய கஷ்டத்தை எதிர்க்க வேண்டியிருக்கிறது. அதை நீ துணிவுடன் எதிர்த்தால் அது மறைந்துவிடும். இது உனக்கும் பயங்கரமான பகைவன் ஏற்படுவான் என்பதைக் காட்டுகிறது.

அரசன் :நட்புப் பாராட்டும் அரசன் முன் செல்வது பெரிய வெற்றிக்கு அறிகுறி. குரூரமான அரசன் முன் செல்வதானால் மிகத் தீமையாகும்.

அரண்மனை : அரண்மனையில் வசிப்பது நல்ல சகுனம், செல்வமும் கௌரவமும் உள்ள நிலையை அடைவாய்.

அலுவலகம் : நீ அலுவலகத்திலிருந்து நீக்கப்படுகிறதாகக் கனவு கண்டால் நீ மரணமடைவாய் அல்லது சொத்து முழுவதையும் இழந்துவிடுவாய். இது யாவருக்கும் மிகத்தீய கனவாகும்.

அவயவங்கள் : அவயவங்கள் முறிவது விவாகத்தில் செய்த பிரதிக்கினை முறிவதைக் காட்டுகிறது.

அழகு : நீ அழகாய் விளங்குவதாகக் கனவு கண்டால் நீ நோய்வாய்ப்பட்டு விகாரமாவாய் என்றும் தேகம் பலவீனமாகும் என்றும் காட்டுகிறது. அழகு அதிகரிக்கத்தான் மரணத்தைக் காட்டுகிறது.

ஆந்தை : நோய், வறுமை, அவமானம் துயரம் ஆகியவற்றைக் காட்டுகிறது. ஆந்தையைக் கனவில் கண்ட பிறகு வாழ்க்கையில் நல்வாழ்வைப்பற்றி நம்பிக்கையே வைக்க வேண்டியதில்லை.

இடி : வாழ்க்கையில் பெரிய ஆபத்து, நம்பிக்கையான நண்பர்கள் உன்னைக் கைவிடுவார்கள். தூரத்து இடியானால் நீ கஷ்டங்களை வெற்றி கொள்வாய் என்று காட்டுகிறது.

இளைஞர் : இளைஞர்களைப் பற்றிக் கனவு கண்டால் இன்பம் கிடைப்பதைக் காட்டுகிறது. நீ இளைஞனாயின் உனக்கு நோயைக் குறிக்கிறது. நீ சீக்கிரம் மரணமடையலாம்.

எரிமலை : வாழ்க்கையில் சண்டை சச்சரவுகள்.

ஒட்டகம் : உனக்குப் பெரும் பாரங்கள் வரும், கடுமையான ஆபத்துகள் வரும். ஆனால் நீ அவற்றை வீரத்துடன் சகித்துக் கொள்வாய்.

ஒளி : ஒளியைப்பற்றிக் கனவு காண்பது மிக நன்று. அது செல்வத்தையும் கௌரவத்தையும் காட்டுகிறது.

கடவுள் : வெகு சிலரே அனுபவிக்கும் அருமையான கனவு இது. பெரிய வெற்றியும் உயர் பதவியும் வரும்.

கடன்பட்டவன் : இது உனக்கு விரும்பத்தகாததும் உனக்குத் தீமை விளையக்கூடியதுமான எதையும் மேற்கொள்ளலாகாது என்று எச்சரிக்கும் கனவாகும். உன் வியவகாரங்களில் ஜாக்கிரதையாயிரு.

கணவன் : உனது இஷ்டம் பூர்த்தியாகாது. நீ இன்னொருத்தியின் கணவனைக் காமுற்றால், நீ துர்க்குணமடைகிறாய் என்பதைக் காட்டுகிறது.

கப்பல் : உனக்குச் சொந்தமான கப்பல் கடலில் சென்றால், உனது செல்வ முன்னேற்றத்தைக் குறிக்கிறது. கடலில் தத்தளித்து முழுகிவிடும் போலிருந்தால் வாழ்க்கையில் விபத்தைக் குறிக்கிறது.

கல்வி : உனக்குச் செல்வாக்கும் கௌரவமும் வரும். நீ கல்வி கற்று அறிவைப் பெருக்குவதாகக் கனவு காண்பது நல்ல சகுனமாகும்.

கற்பழித்தல் : கெடுதிகள் நெருங்குகின்றன. நம்பிக்கைகள் நாசமாகலாம். நிராசை உன்னைப் பிடிக்கும்.

கழுதை : நம்பிக்கையற்ற சூழ்நிலை இருந்தபோதிலும் போராட்டத்துக்கும் கஷ்டத்துக்கும் பிறகு உன் பெருந்துன்பங்கள் யாவும் முடிவில் வெற்றியில் முடிவுறும்.

கன்னிகை : வெற்றி, உனக்குச் சுபம் உண்டாகும். ஆசைகள் நிறைவேறும்.

காக்கை : இது துக்ககரமான பிரேதக் கிருத்தியத்தைக் காட்டுகிறது.

சிறைச்சாலை : சிறைச்சாலையில் இருப்பதாகக் கனவு கண்டால் உனக்கு வாழ்க்கையில் நன்மை உண்டாகும் என்று காட்டுகிறது. இது எதிரிடை வினையும் சுவப்னம்.

கிரகணம் : ஆசைகள் மறைகின்றன. மரணம் அருகில் இருக்கிறது. போகம் முடிவடையும். வாழ்க்கை முடிவுக்கு வந்து கொண்டிருப்பதால், மனைவியோடு கொஞ்சுவதில் பயனில்லை. நண்பன் துரோகியாவான். எதிர்பார்த்தவைகள் பலன் தரா.

குருடன் : குருடரைப்பற்றிக் கனவு கண்டால் உனக்கு உண்மையான நண்பர்கள் யாருமில்லை என்பதற்கு அறிகுறி.

குழந்தைகள் : பிறப்பின் இழப்பார்க்க.

குற்றம் சாட்டு : இது பெருந்துன்பத்துக்கு அறிகுறி. உன்னுடைய சொந்த முயற்சியால் பணம் பாக்கியத்தைப் பெறுவாய்.

குஷ்டம் : உனக்குக் குஷ்டநோய் உள்ளதாகக் கனவு காண்பது எப்போதும் வரப்போகும் பெரிய துரதிருஷ்டத்தைக் காட்டுகிறது. ஒரு வேளை நீ ஏதோ குற்றம் செய்து சட்டத்தால் கடுமையாகத் தண்டிக்கப்படலாம். உனக்குப் பல பகைவர்கள் ஏற்படுவார்கள்.

கைக்குழந்தை : நீ குழந்தைக்கு பால் கொடுத்துக் கொண்டிருந்தால், துக்கத்தையும் துன்பத்தையும் குறிக்கிறது. நோய்வாய்ப்பட்ட குழந்தையை நீ கண்டால், உனது உறவினரில் யாரோ இறந்து விடுவர்.

கொலை : நீ யாரையோ கொலை செய்ததாகக் கனவு காண்பது நீ தீயவனாகவும் துர்க்குணமுள்ளவனாகவும் குற்றவாளியாகவும் ஆகப்போவதைக் குறிக்கிறது.

சண்டை : குடும்பங்களில் சச்சரவு, காதலர்களிடைச் சிறிது காலம் பிரிவு இல்லா விட்டாலும் மனக் கசப்பு வணிகர், வீரர், மாலுமிகள் இவர்களுக்குத் தீய கனவாகும்.

சப்தங்கள் : சப்தங்களைக் கேட்பதாகக் கனவு காண்பது குடும்பச் சச்சரவுகளையும் வாழ்க்கையில் பெருந் துன்பத்தையும் காட்டுகிறது.

சமுத்திரம் : கனவில் சமுத்திரம் எவ்வாறு காணப்படுகிறதோ அவ்வாறே வாழ்க்கை இருக்கும். அதாவது சமுத்திரம் அமைதியாயிருந்தால் அமைதியான வாழ்க்கை. சமுத்திரம் கொந்தலிப்பாயிருந்தால் வாழ்க்கையும் துன்பம் நிறைந்ததாய் இருக்கும்.

சவக்குழி : யாராவது நண்பனோ உறவினனோ மரணம்! நோயிலிருந்து நலம் பெறுவது சந்தேகம்.

சிங்கம் : இச் சுவப்னம் மேன்மை, உயர்வு, கௌரவம் ஆகியவற்றைக் குறிக்கிறது. நீ மனிதர்களில் மிக முக்கியஸ்தனாவாய். பெரிய அதிகாரமும் ஆனந்தமும் ஏற்படும்.

சிரங்கு : இது துரதிருஷ்டமான கனவு, அதிகக் கஷ்டத்தையும் கெடுதியையும் குறிக்கிறது. நீ துக்கமடைவாய்.

சிறைச்சாலை : இது எதிரிடை விளையும் கனவு சுதந்திரத்தையும் சந்தோஷத்தையும் காட்டுகிறது.

சினம் : நீ யாரிடம் சினம் கொள்கிறாயோ அவனே உனக்குச் சிறந்த நண்பன்.

சுவர்க்கம் : உனது மீதி வாழ்க்கை ஆத்மீக ஆனந்தம் நிறைந்தும் சாவு சாந்தமாயும் இருக்கும்.

செல்வப் பெருக்கு: இது அனுகூலமான கனவல்ல. ஏழ்மையைக் காட்டுகிறது.

தந்தை : தந்தை உன்மேல் அன்பு வைத்திருக்கிறார். தந்தை இறந்துவிட்டால், அது துக்கத்துக்கு அறிகுறி.

தவளைகள் : இவை கெடுதலானவையல்ல. ஆகவே இந்தக் கனவு பிரதிகூலமானதல்ல. இது வெற்றியைக் குறிக்கிறது.

தாய் : நீ உன் தாயைக் கண்டு அவளுடன் பேசுவதாகக் கனவு கண்டால், உனக்கு வாழ்க்கையில் நலம் பெருகும் என்பதைக் காட்டுகிறது. உன் தாயை இழந்துவிட்டதாகக் கனவு காண்பது அவள் நோய்வாய்ப்பட்டிருக்கிறாள் என்பதாம்.

திருமணம் : நீ ஒரு பிரேதக்கிரியைக் காணவேண்டிவரும் என்று காட்டுகிறது. உனக்கு மணம் நடப்பதாகக் கனவு கண்டால் உனக்கு மண வாழ்க்கையேயில்லை. அசௌக்கியமாயுள்ளவர்களின் மணவினை அவர்களது மரணத்தைக் குறிக்கிறது.

தீக்கனவு : நீ மூடர்கள் சொல் கேட்கிறாய், அவர்களைப் பற்றி எச்சரிக்கையாக இரு.

தீமை : யாராவது உனக்குத் தீங்கிழைத்தால், உன்னை அழிப்பதற்குப் பகைவர்கள் இருக்கிறார்கள் என்று அர்த்தம். அவர்களைப்பற்றி எச்சரிக்கையாக யிரு. உன் இருப்பிடத்தை மாற்றுவது நலம்.

தூக்கிலிடுதல் : நீ தூக்கிலிடப்பட்டால் அது உனக்கு நலம். நீ சமூகத்தில் உயர்ந்து செல்வந்தனாவாய்.

தேன் : கனவில் தேன் பருகுவது பணம், பாக்கியத்தைக் குறிக்கும், நீ எதிர்பார்த்ததுக்கு மேல் உயர்ந்திடுவாய். உயர்குடிப்பிறந்த அழகுள்ளவரை மணந்து பெருவாழ்வு வாழ்வாய்.

நதி : வேகமாகக் கலங்கி ஓடும் நதி துன்பங்களையும் கஷ்டங்களையும் காட்டுகிறது. ஆனால் அமைதியான தெளிந்தநீர் உள்ள நதி சந்தோஷத்தையும் அன்பையும் காட்டுகிறது.

நரகம் : உடல் நோயும் மனோவேதனையும் உண்டாகும். விரோதிகள் காரணமாயும் உறவினர் மரணம் முதலியவற்றாலும் பெருந்துன்பம் வரும்.

நிந்தனை : உனக்கும் நீ வியாபாரம் செய்யும் ஆளுக்குமிடையில் சச்சரவு உண்டாகலாம். ஜாக்கிரதை. கவனத்தில் குறையாதே.

நியாயவாதி : நீ ஒரு நியாயவாதி யாயிருப்பதாகக் கனவு கண்டால் எதிர்காலத்தில் உயர்நிலை அடைந்து யாவராலும் கௌரவிக்கப்படுவாய்.

நீர் : யாரோ பிறக்கப்போவதைக் காட்டுகிறது.

நெருப்பு : ஆரோக்கியமும் பேரானந்தமும், அன்புள்ள சுற்றமும் நட்பும்.

நோய் : நோயாளி நோயைப்பற்றிக் கனவு கண்டால், அதனின்று நலமடைவான் என்பதாம். இளைஞர்களுக்கு கெட்ட சகவாசமும் மதுபானமும் கூடாது என்பதற்கு எச்சரிப்பு.

பசு : கறவைப்பசு செல்வத்திற்கு அறிகுறி. பசுவால் துரத்தப்பட்டால் பிடிக்கவரும் பகைவனைக் குறிக்கும்.

பஞ்சம் : தேசத்துக்கு நல் வாழ்வும் தனி மனிதனுக்கு வசதியும், நல்ல இன்பநுகர்ச்சி, இது எதிரிடை விளையும் கனவு.

படகு : அமைதியான நீரின் மீது படகிலோ கப்பலிலோ செல்வது அதிருஷ்டம். கொந்தளிப்பான நீரானால் துரதிருஷ்டம். நீரில் விழுவது பேராபத்துக்குச் சூசகம்.

பட்சிகள் : பட்சிகள் பறப்பதைப் பார்ப்பது மிகவும் துரதிருஷ்டமானது; அது உன் சூழ்நிலையில் துக்க நிகழ்ச்சியைக் குறிக்கிறது. ஏழைகள் முக்கியமாக பட்சிகள் பாடுவதைக் கேட்டால் அவர்கள் நிலை மேன்மை பெறும்.

பணம் : கனவில் பணத்தைப் பெறுவது உலகில் நல்வாழ்வைக் குறிக்கிறது. பணம் கொடுப்பது கொடுக்கும் நிலைமை ஏற்படுவதைக் காட்டுகிறது.

பன்றிகள் : இது அதிருஷ்டமும் துரதிருஷ்டமும் கலந்து வருவதைக் குறிக்கிறது. உனக்குப் பெருந்துன்பங்கள் வந்தாலும் நீ ஜெயமாவாய். உனக்குப் பல பகைவர்கள் இருக்கிறார்கள் ஆயினும் சிலர் உனக்கு உதவி செய்வார்கள்.

பாடுதல் : இது எதிரிடை ஏற்படும் சுவப்னம், இது அழுகையையும் துக்கத்தையும் குறிக்கிறது. பெருந் துன்பம் வரும்.

பாம்புகள் : உனக்கு தந்திரமுள்ள அபாயகரமான பகைவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் உன் பெயரைக் கெடுத்து வாழ்வையும் குலைப்பார்கள்.

பாலைவனம் : பாலைவனத்துக்குக் குறுக்காய்ப் பயணம் செய்வது நீண்ட கஷ்டமான பயணம் அவசியம் நேரிடும் என்பதைக் காட்டுகிறது. வெய்யில் கூட இருப்பது வெற்றிகரமான பிரயாணத்தைக் குறிக்கிறது.

பிசாசு : நீ சீக்கிரம் உன்னைச் சீர்திருத்திக் கொள்ள வேண்டும். பெருந்தீமை உனக்கு வரலாம். நல்வழியைப் பின்பற்று.

பிரம்மசாரி : ஒரு பிரம்மச்சாரியைப் பற்றிக் கனவு காண்பது நீ சீக்கிரம் ஒரு நண்பனைச் சந்திப்பாய் என்று கூறுகிறது.

பிரயாணம் : உன்னுடைய நிலைமைகளிலும் சூழ்நிலைகளிலும் பெரிய மாறுதல் உண்டாகும் என்பதைக் காட்டுகிறது. நல்ல பயணம் நல்ல நிலைமைகளையும் கெடுதலான பயணம் கஷ்டங்களையும் தீய வாழ்க்கையையும் காட்டுகிறது.

பிரேதம் : பிரேதத்தைப் பார்ப்பது அவசரமாய் முன் யோசனையின்றி மண ஏற்பாடும் அதனால் நீ துயரப்படப் போவதையும் காட்டுகிறது.

பிறப்பு : கல்யாணமாகாத பெண்கள் குழந்தைகளைப் பெறுவதாகக் கனவு கண்டால் அவர்கள் கற்பழிவது நிச்சயம் என்பதாம். கல்யாணமான பெண்களானால் இன்பகரமான பிரசவத்தைக் குறிக்கிறது.

புத்தகங்கள் : புத்தகங்களைப் பற்றிக் கனவு காண்பது சுப சகுனம். உனது எதிர்காலம் மனதுக்குகந்ததாய் இருக்கும். ஸ்திரீ, புத்தகங்களைப் பற்றிக் கனவு கண்டால் மிகக்கல்விமானான புதல்வன் பிறப்பான்.

பூகம்பம் : வியாபாரத்தில் நஷ்டம், குடும்பத்தில் மரணம் பிரிவு முதலிய பெருந்தீமை வரப்போவதை முன் கூட்டியே காட்டுகிறது. மரணத்தினால் குடும்ப பந்தங்கள் அறுபடுகின்றன. குடும்பத்தில் சச்சரவு, எங்கும் பயம். எல்லாப் புறங்களினின்றும் மனத்தை பிளக்கும் வேதனையும் ஆபத்தும் ஏற்படும்.

பூக்கள் : அழகுள்ள பூக்களைக் கொய்வது நல்வாழ்வைக் காட்டுகிறது. நீ எடுத்துக் கொள்ளும் எல்லாக் காரியங்களிலும் அதிருஷ்டம் உண்டாகும்.

பூனை : இது ஒரு கெட்ட சுவப்பனம். இது துரோகத்தையும் மோசத்தையும் காட்டுகிறது. பூனையைக் கொல்வது எதிரிகளைக் கண்டறிவதைக் காட்டுகிறது.

பூப்போடுதல் : உன்னிடம் பிரியமுள்ளவர்கள் உன்னிடம் நன்றி உள்ளவர்கள் அல்ல. அவர்கள் உன்னை ஏமாற்றுவார்கள்.

பேய் : இது ஒரு கெட்ட சகுனம். மிதமிஞ்சிய துன்பங்கள் வரும், பயங்கரமான பகைவர்கள் உனக்கு ஏற்படுவார்கள்.






மணமக்கள் : இது ஒரு துர்ப்பாக்கியமான கனவு. இது துக்கத்தையும் ஏமாற்றத்தையும் குறிக்கிறது.

மரணம் : இது நீண்ட ஆயுளைக் காட்டுகிறது. ஆனால் நோயாளி மரணத்தைப் பற்றிக் கனவு கண்டால் அதன்படி நடக்கும்.

மழை : முக்கியமாகக் கனமாயும் இரைச்சலோடும் பெய்தால் கெடுதியைக் காட்டுகிறது. மிருதுவான தூரல் சந்தோஷத்தையும் சாந்தியுமுள்ள வாழ்வையும் குறிக்கும் நற்கனவாகும்.

மாடுகள் : நீ பணத்தையும் பாக்கியத்தையும் அடைவாய். பெரிய கொம்புகள் உள்ள கருப்பு மாடுகள் துன்புறுத்தும் இயல்புள்ள பகைவர்களைக் குறிக்கிறது.

முன்னேற்றம் : நீ எடுத்துக்கொள்ளும் காரியத்தில் வெற்றி கிடைப்பதற்கு அடையாளம்.

மூட்டைப்பூச்சி: நிச்சயமாக நோய் வருவதற்கு அறிகுறி. பல பகைவர்கள் உனக்குத் துன்பம் விளைவிக்க இருக்கிறார்கள்.

மேகங்கள் : கருத்த மேகங்கள் பெருந்துயரங்களை அனுபவிக்க வேண்டி வரும் என்பதைக் காட்டுகின்றன. மேகங்கள் சென்று கொண்டிருந்தாலும் கலைந்து விட்டாலும் அவை கழிந்துவிடும்.

யானை : உடல், நலம், வெற்றி, பலம், நல்வாழ்வு, அறிவு.

யுத்தம் : யுத்தத்தில் இருப்பதாகக் கனவு கண்டால் அண்டை அயலாரோடு அல்லது நண்பர்களோடு பலமான சச்சரவைக்குறிக்கிறது.

ரொட்டி : உலக வியாபார விஷயங்களில் நீ வெற்றியடைவாய். நல்ல ரொட்டியை உண்பது உடல்

நலத்தையும் நீண்ட ஆயுளையும் காட்டுகிறது. உலர்ந்து போன ரொட்டி பிரேதக் கிரியையைக் குறிப்பதால் கெடுதி.

வயல்கள் : பெரிய நல்வாழ்வு, பசுமையான வயல்களில் நடப்பது பெரு மகிழ்ச்சியையும் செல்வத்தையும் காட்டுகிறது. ஒவ்வொன்றும் நலமாகவே நடக்கும். தீய்ந்த வயல்கள் வறுமையைக் குறிக்கின்றன.

விருந்து : நீ விருந்துண்டு கொண்டிருப்பதாகக் கனவு கண்டால், உனக்கு உணவு கூட கிடைக்காத அப்படிப்பட்ட கஷ்டங்கள் வரும் என்று காட்டுகிறது. நீ வசதியின்றியிருப்பாய். விரோதிகள் உன் பெயரைக் கெடுக்க முயல்வார்கள். நீ யாரிடம் நம்பிக்கை கொள்வது என்பது பற்றி ஜாக்கிரதையாகயிருக்க வேண்டும்.

விபத்து : சொந்த கஷ்டங்கள் தவிர்க்க முடியாதவைகளாகும். ஆனால் நீ சீக்கிரம் கஷ்டத்தினின்று விடுபடுவாய்.

விளக்கு : மிக அனுகூலமான கனவு. ஆனந்தமான வாழ்க்கை. குடும்பம் சாந்தி பெறும். இந்தக் கனவு எப்போதும் மங்களகரமானது.

வீடு : பாலைப் பருவத்தில் வீட்டு வாழ்க்கையைப் பற்றிக் கனவு காண்பது ஆரோக்கியத்தையும் நல்வாழ்வையும் குறிக்கிறது. முன்னேற்றத்துக்கு அறிகுறி.

வெண்ணெய் : நற்கனவு, மகிழ்ச்சியும் விருந்தும் கஷ்டங்கள் சீக்கிரம் முடிவடைகின்றன.

வைகுண்டம் : உனது மீதி வாழ்க்கை ஆத்மீக ஆனந்தமுள்ளதாயும் மரணம் அமைதியாயும் இருக்கும்.

வெள்ளம் : வியாபாரிகளுக்கு வெற்றிகரமான வியாபாரமும் பத்திரமான பயணமும் ஆனால் சாதாரண மனிதர்களுக்கு தேக அசுத்தத்தையும் பிரதிகூலமான சந்தர்ப்பங்களையும் காட்டுகிறது.